உ

சிவமயம்.

# தேவிகாலோத்தர

## மூலமும் உரையும்.




இயற்றமிழ் ஆசிரியர்

அ-வீராசாமிசெட்டியார்

மாணாக்கர் ஆகிய

திருமயிலை

முருகேசமுதலியாரால்


பலபிரதிகளைக்கொண்டு

பரிசோதித்து,




ஊ-புஷ்பரதசெட்டியாரால்

தமது

கலாரத்நாகரம் என்னும்

அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டன.



சென்னபட்டணம்:

1875.

உ

கடவுள்துணை.

# தேவிகாலோத்தர

## உரைபாடம்.



### பாயிரம்.

ஸ்ரீகைலாசபதியாகிய சிவபெருமானுடைய திருமுகத்திற் றோன்றியதாயும் உலோகோத்தரமாயும் இருக்கிற தேவிகாலோத்தரமென்னும் பெயரையுடைய சிவாகமத்திலே சுத்தமான ஞானத்தையும் ஞாநசாரத்தையும் போதிப்பதாயுள்ள ஞாநசாரப் போதகப்படலமானது காமிகாதி சிவாகமம் இருபத்தெட்டினும் சாராற்சாரமா யெடுத்துச் சேர்த்த சங்கிதையாயிருக்கிற சர்வத்தினுஞ் சாராற்சாரமாயுள்ளது. அந்தப் படலத்து எண்பத்தைந்து சூத்திரத்தையும் ஆராய்ந்து தமிழ்ச்செய்யுள் அறுபத்தெட்டிற் செய்யப்பட்ட தேவிகாலோத்தரமென்னும் பெயரையுடைய இந்தச் சாத்திரத்தையும் இதனுரையையும் ஞானதிருஷ்டிஉடையவர்கள் குற்றமுண்டாகில் தீர்த்துக்கொள்ளா

நிற்பர்கள். ஞானதிருஷ்டி யில்லாதவர்களு க்கு இந்நூலின் நன்மை தீமை தெரியாது. ஆகையால், அவர்களாற் சொல்லப்படும் குற்றம் குற்றமாகக் கொள்ளப்படாது. இந் நூலையும் உரையையும் பத்திபண்ணிக் கேட்டும் சிந்தித்தும் தெளிந்தும் நிஷ்டைகூடியு நின்றவர்கள் ஆணவாதி பஞ்சபாசங்களையும் விட்டுநீங்கிச் சிவாநந்நிய சாட்சாத்காரமாயுள்ள சிவசாயுச்சியத்தை அடைவதற்குச் சந்தேகமின்று.

---

## காப்பு.

---

### விநாயகர் வணக்கம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

முத்திவிநா யகன்மனத்தின் முரணறவே முடிகிநில முதல் விளக்கும், அத்திவிநா யகனெனவந் தவித்தையியல் பனைத்துமழித் தறத்தை யாக்கும், சத்திவிநா யகனுயர்ந்த தாணுவிநா யகன்றேற்றந் தருமோ ரட்ட, சித்திவிநா யகன்மதுரைச் சித்திவிநா யகனிருதாள் சிரத்தில் வைப்பாம்.

### சோமசுந்தரக்கடவுள் வணக்கம்.

இருள்விளையாட் டொளிவிளையாட் டெ
னவுணர்த்தி மறைத்தமலத் தூடு நீங்கா, ம
ருள்விளையாட் டாருயிர்கண் மயங்காம லகி
லமெலா மகிழ்ந்து போற்றி, அருள்விளை
யாட் டெனவியப்ப வருந்தமிழ்நாட் டணி
மதுரை யதனு ளெண்ணெண், திருவிளையா
ட் டுடையபிரான் செங்கமலப் பொற்பாத
ஞ் சென்னி சேர்ப்பாம்.

### அங்கயற்கணம்மைவணக்கம்.

இருளாகி வெளியாகி யிருள்வெளிக ட
மைநீங்கி யெழுதா வேதம், தெருளாத பரை
யாகி திரிவிதசத் திகளாகிச் சிந்தைக் கெய்
தாப், பொருளாகி நின்றபிரா னணிவெள்
ளி யம்பலத்துட் புரியா நின்ற, அருளாடல்
கண்டுவந்த வங்கயற்கண் ணம்மைபதத் தன்
பு செய்வாம்.

பாயிரம் முற்றிற்று.

---

## நூல்.

ஸ்ரீகைலாசபதியைப் பார்வதியார் நமஸ்
காரஞ் செய்துநின்று தேவரீர் திருமுகத்தி
ல்தோன்றிய சிவாகமத்தில் மோட்சவிச்சை

யையுடைய பக்குவ ஆன்மாக்களுக்குச் சிவ சாயுச்சியத்துக்குக் காரணமாயிருக்கிற ஞானத்தையும் ஞானசாரத்தையும் வெளியிட்டருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்தருளுகின்றார்:—

இருவுமது.

வானவர் தலைவா விந்த மன்னுயிர் முத்தியெய்த, ஆனவா சார ஞான மருளினை லருளென் றேத்தி, மானமா யில்வே லொண்கண் மணமலி குமுதச் செவ்வாய்த், தேனமர் குழலா டேவன் றிருந்தடி பணிந்து சொன்னாள்.

(இ-ள்.) மான் அமர் அயில் வேல் ஒள் கண் மணமலி குமுதச் செவ்வாய் தேன் அமர் குழலாள் தேவன் திருந்து அடிபணிந்து ஏத்தி—மான்போலும் நோக்கத்தையும் கூர்மையினால் வேலையொத்த ஒள்ளிய நயனத்தையும் வாசனைநிறைந்த செவ்வாம்பல்போன்ற சிவந்த வாயையும் வண்டுகள் தங்கிய மலர்முடித்த கூந்தலையுமுடைய உமாதேவியார் சிவபெருமானது ஸ்ரீபாதத்தில் நமஸ்கரித்துத் துதித்து,

வானவர்தலைவா!—பிரம விஷ்ணுக்கள் முதலிய தேவர்களுக்கெல்லாம் நாயகனே,

இந்த மன் உயிர் முத்தி எய்த—தீவிரம் தீவிரதர முதலான சத்திநிபாதத்தினாலே பவித்திரமாகிய அந்தக்கரணத்தை யுடையராய் நித்தியராயிருக்கிற பக்குவான்மாக்கள் யாவர்க்கும் ஆணவாதி பஞ்சபாசபந்தநிவர்த்தியின்பொருட்டு,

ஆன ஆசார ஞானம் அருளினால் அருள் என்று சொன்னாள்—பசுத்துவநிவர்த்தியில் விட்டு நீங்காமலிருக்கிற பதித்துவப் பிராப்தியாகிய சிவசாக்ஷாத்காரமாயுள்ள பரமசிவ சாயுச்சியத்தை விளக்கும் ஞானத்தையும் ஞானாசாரத்தையுங் கிருபையினாலே அடியேனுக்குத் திருவுளம் பற்றவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்தருளினார் எ-று.()

பார்வதியாராலே பிரேரிக்கப்பட்ட திருவுளத்தை உடையவராகிய சிவபெருமான் தம்முடைய தேவியாருக்கு ஞானத்தையும் ஞானாசாரத்தையும் திருவாய்மலர்ந்தருளுகின்றார்:—

உத்தம குணத்தாய் ஞான மொழுங்கெனு மிரண்டினாலே, மெய்த்தவர் முத்தி யெய்தும் விதியினை விரித்துரைப்பன், இத்திறமுரைத்த காலை யிதனினால் விளங்கா தாரு

க், கெத்தனை யநந்த கோடி நூலினு மினிவிளங்கா.

(இ-ள்.) உத்தம குணத்தாய்! — விசேஷமாகிய நல்ல குணத்தை உடையாளே,

ஞானம் ஒழுங்கு எனும் இரண்டினுலே மெய்த்தவர் முத்தி எய்தும் விதியினை விரித்து உரைப்பன் — ஞானத்தினுலும் ஞானசாரத்தினுலும் ஞானிகளானவர்கள் பஞ்சபாசங்களையுநீங்கிச் சிவசாயுச்சியத்தை அடைதற்குரிய ஞானத்தையும் ஞானசாரத்தையும் விரித்துச் சொல்லுகிறேம்,

இத்திறம் உரைத்தகாலை இதனினுல் விளங்காதாருக்கு எத்தனை அநந்தம் கோடி நூலினும் இனி விளங்கா — இங்ஙனஞ் சொல்லப்பட்ட காலோத்தர ஞானபோதத்தினுலே சித்தசலனம் நீங்கி விளங்காதபேருக்கு அநந்தகோடி சாத்திரபோதையினுலும் ஞானம் உண்டாகாது எ-று.

"காலோத்தரஞானம்" பரிபாககாலத்தில் உண்டாகும் ஞானம்; "காலோத்தர போதை" என்பது பரிபாககாலத்திலே உண்டாகும் ஞானத்தைப் போதிக்கிற சாத்திரம்; "அநந்தகோடி நூல்" என்பது சமயிகள் சாத்திரம். "விளங்கா" என்பதின் ஈற்றில் துவ் விகுதி விகாரத்தால் தொக்கது. (௨)

விஸ்தாரமாக மேற்சொல்லப்படும் ஞானாசாரங்களினாலே உண்டாகும் மோட்சரூபமாயிருக்கிற ஞானசாதகருடைய சொரூபத்தைத் திருவாய் மலர்ந்தருளுகின்றார்:—

**கொச்சகக்கலிப்பா.**

ஆசைபய மையமாங் காரமுயிர்க் கச்சமின்றிப், பாசம்விடல் கருணையுட னொருமைபத்தி ஞானமுத்திக், காசைமிக வுடையராயோகதற் பரருமாய்ப், பேசியகா லோத்திரத்தின் வழிநிற்பர் பெரியோரே.

(இ-ள்.) ஆசை (இன்றி) — சுத்தமாயை அசுத்தமாயை யென்று சொல்லப்பட்ட இருவகை மாயையினுள்ள போகங்களில் ஆசையில்லாதவராய்,

பயம் (இன்றி) — அந்நிய சாத்திரங்களில் சொல்லியிருக்கிற விதிநிஷேதங்களிலே பயமில்லாதவராய்,

ஐயம் (இன்றி)—பசுசாத்திர அநுட்டானம் சிவசாத்திர அநுட்டானம் என்னும் இரண்டில் எதை விடுவோம் எதைப் பற்றுவோம் என்கின்ற சங்கையில்லாதவராய்,

ஆங்காரம் (இன்றி)—யானென தென்னும் செருக்கில்லாதவராய்,

உயிர்க்கு அச்சம் இன்றி—சர்வான்மாக்க ளுக்கும் பயத்தை உண்டாக்காதவராய்,

பாசம்விடல் (உடையர் ஆய்)—ஆணவாதி பஞ்சபாசங்களையும்விட்டு நீங்குதலுடையராய்,

கருணையுடன் ஒருமைபத்தி (உடையர் ஆய்)—சர்வான்மாக்களிடத்தும் கிருபையுள்ளவராய் ஞானசாத்திரத்தில் ஒருமைப்பாட்டை உடையவராய்ச் சற்குருவினிடத்தும் ஞான சாத்திரங்களினிடத்தும் விசுவாசம் உடையவராய்,

ஞானம் (உடையர் ஆய்)—இந்தச் சாத்திரத்திற் சொல்லும் ஞானம் உடையவராய்,

முத்திக்கு ஆசைமிக உடையர் ஆய்—மோட்சத்திலே மிகவும் ஆசை உடையவராய்,

யோகதற் பரரும் ஆய்—சிவயோகத்தில் ஒருப்பட்டவருமாய்,

பேசிய காலோத்தரத்தின் வழி நிற்பர் பெரியோர்—சொல்லப்பட்ட காலோத்தர ஞானத்தைச் சாதிக்கிற சாதகத்தின் வழித்தாக நிற்பர்கள் உயர்ந்தோர்கள் எ—று. ஏ—ஈற்றசை. (௫)

மோட்ச உபாய சாதகனுடைய பலத்தின்மகிமையை விரித்தருளிச் செய்கின்றார்:—

வாயுவென மறுகுகின்ற மனமடங்கும் வகைதடுப்பான், ஆயவவ னரிபிரம னிந்திரன்சண் முகன்குருவும், ஏயபல தேவதைகள் யோகிதபோ தனனறிஞன், ஆயினெல்லா முடையானு மவனணங்கு நுணங்கிடையாய்.

(இ-ள்.) அணங்கு நுணங்கு இடையாய்!—துவளும் நுண்ணிய இடையை உடையாளே,

வாயு என மறுகுகின்ற மனம் அடங்கும் வகைதடுப்பான்—வாயுவைப்போலச் சஞ்சலமாயிருக்கிற மனதடங்கும்படி தடுப்பவன் யாவன்,

ஆய அவன் அரி—அவனே விட்டுணுவும்,

பிரமன்—பிரமனும்,

இந்திரன்—தேவேந்திரனும்,

சண்முகன்—குமரக்கடவுளும்,

குருவும்—ஆசாரியனும்,

ஏயபலதேவதைகள்—பொருந்திய காலாக்கினி உருத்திரபுவனமுதலாக அனுசிருத

புவன்முடிவாக இருக்கிற இருநூற்றிருபத்துநாலு புவனங்களிலும் உள்ள சமஸ்த தேவதைகளும்,

யோகி—சத்திய ஞானாநந்த சொரூபமாயிருக்கிற சிவசாயுச்சியத்தை அடைந்த சிவயோகியும்,

தபோதனன்—தவத்தைத் தனமாகவுடையவனும்,

அறிஞன்—அறிவை உடையவனும்,

ஆயின் எல்லாம் உடையானும் அவன்—ஆராயுமிடத்து எல்லாநன்மையு முடையவனும் அவனே எ-று.

பிரமன் முதலாகிய சமஸ்ததேவதைகளும் இந்தஞானசாதகனேயென்று சொல்லியது சர்வாத்மசொரூபமாயிருக்கிற சிவமயன் ஆகையினாலென்க. இஃதன்றி, இலக்கணையாகப் பிரமன்முதலான சர்வதேவதைகளினுடைய பதங்களையும் அதிலுள்ள போகங்களையும் விட்டுநீங்கிப் பஞ்சகிருத்தியத்திற் கப்பாற்பட்டுச் சிவசாட்சாத்காரமா யிருப்பனென்பது கருத்து. (௬)

ஞான உபாய சாதகனுடைய விசிட்டத்தைத் திருவாய்மலர்ந்தருளி, மேல்ஞானசாதகன் விசேடத்தை அருளிச்செய்கின்றார்:—

அறிவுநிலை தவமடக்கம் புண்ணியந்தியா னங்குணங்கள், நெறியுடைய பத்தி நெறி யுபா யந்நினைக்கின், மறுகும்வளி யனையம ன மடங்குவதொன் றியாததுவே, அறிவு டையோ ரிவையனைத்து மாமென்றே யறை குவரால்.

(இ-ள்.) மறுகும் வளி அனைய மனம் அட ங்குவது ஒன்று யாது அதுவே—வாயுவை ப்போலச் சஞ்சலமாயிருக்கிற மனமடங்கு கைக்கு யாதோருபாயம் உண்டு அந்தவுபா யந்தானே,

அறிவு நிலை தவம் அடக்கம்— திரிகாலத் தையும் நிச்சயம்பண்ணுகிற அறிவும் தைரி யமும் தவமும் அடக்கம் உடைமையும்,

புண்ணியம் தியானம்—புண்ணியமும் தி யானமும்,

குணங்கள் நெறிஉடைய முத்திநெறி மு த்தி உபாயம்—விசேஷ குணமும் முத்தி க்குவழியும் சிவசாயுச்சிய மோட்சத்துக்கு உபாயமும்,

நினைக்கின் அறிவுடையோர் இவை அனை த்தும் ஆம் என்றே அறைகுவர்—விசாரிக் கு மிடத்து அறிவுடையோர்கள் இங்ஙனம் சொல்லப்பட்ட இவ்விசேஷ குணங்களெல்

லாம் மன நிரோதந்தானே ஆமென்று செ ல்லுவர் எ-று. ஆல் - அசை. (ரு)

இம் மன நிரோதம் பண்ணுவதே மோட்சம்; அங்ஙனம் பண்ணாமை பந்தம்; ஆகையினால் மோட்சத்திலே ஆசையை உடைய விவேகியானவன் இம் மன நிரோத வுபாயத்தை அநுஷ்டிக்க வேண்டுமென்று அருளிச்செய்கின்றார்:—

கருத்தடங்கின் முத்தியது கையகலிற் கட்டாகும், விரித்தபொரு ளிதுவென்ன வறிவுடைய மேதக்கோர், திருத்தகுநல் லறிவாலே சித்தத்தைத் திறம்பாமல், அருத்தியுடனிலைநிறுத்து மதுவறிவின் பயனாமால்.

(இ-ள்.) கருத்து அடங்கின் முத்தி அது கை அகலின் கட்டு ஆகும் — மனமடங்கும் ஆயின் அதுவே சாயுச்சிய மோட்சமாம்; மனம் விடயங்களிற்சென்று அடங்காதாயின் அதுவே பஞ்சபாச பந்தமாம்,

விரித்தபொருள் இது என்ன அறிவுடைய மேதக்கோர்—வேதாகமங்கள் விரித்துச்சொல்லும்பொருள் இந்த மனநிரோதந்தானே என்றறிந்த அறிவுடையபெரியோர்கள்,

திருத்தகுநல் அறிவாலே சித்தத்தைத் திறம்பாமல் அருத்தி யுடன் நிலை நிறுத்தும் அது அறிவின் பயன் ஆம்—நின்மலமாயிருக்கிற நல்லறிவினாலே மனத்தை அசையாமல் ஆசையுடனே அடக்கும் அதுவே ஆன்மலாபமாம் எ-று. ஆல் - அசை. (கூ)

மனநிரோத மானபிறகு அகண்டாகார சச்சிதாநந்த பரிபூரணமாய் விளங்குகிற பரமசிவ ஐக்கியத்தைப் பண்ணிக்கொண்டிருக்கின்றவனே விவேகியென்று அருளிச்செய்கின்றார்:—

கலிவிருத்தம்.

ஒருபொருளெக்காலத்து முளதாகிச் சிறப்புடைத்தாய், இருவினை யின்றிமேலாமின்பத்தை யளிப்பதாகும், பொருவிலா விதன்மேலன்பு பொருந்திடா தாருமுண்டே, திருவுலா வகன்றகல்விச் சிறந்தசான் றோர்கடாமே.

(இ-ள்.) ஒருபொருள் எக்காலத்தும் உளது ஆகி—ஒரு வஸ்து எக்காலத்தும் உள்ளதாகி,

சிறப்பு உடைத்து ஆய்—சிறப்பினையுடையதாகி,

இருவினை இன்றி — தியானதாரணை முதலான கருமங்களில்லாததாகி,

மேலாம் இன்பத்தை அளிப்பது ஆகும்—நின்மலமாய் நிர்விசேஷமாய் நிராமயமாய்ச் சுயம்பிரகாசமாய் இருவகை மாயையின்கண் உள்ள இன்பங்களுக்கெல்லா மேலாகிய பரமாநந்தத்தைக் கொடுப்பதாகிய,

பொரு இலா இதன்மேல் திரு உலா அகன்ற கல்விச் சிறந்த சான்ருேர்கள் அன்பு பொருந்திடாதாரும் உண்டே—ஒப்பும் உயர்வும் அற்ற இந்தப் பரமசிவ ஐக்கியத்தில் சிறப்பினையுடையவேதாகமங்களையுணர்ந்தபெரியோர்களில் எந்த விவேகிகள் தாம் அன்புவையாதிருப்பர் எ-று. தாம்-ஏ-அசை.()

இப்படி நிட்களமாகிய பரமசிவ ஐக்கியத்தைப் பண்ணிக்கொண்டிருக்கிற ஞானசாதகனே பரமசிவ சாயுச்சியத்தை அடைவனென்று அருளிச்செய்கின்ருர்:—

தூரியனுய்ப் பொருள்களுக்குத் துளக்கமிலா தொன்ருகி, ஆரியமா மநுபவமா மதன்மேலன் புடையவவன், காரியமுங் குழன்மடவாய் கருதானே யாயிடினும், நேரியதாய் நித்தமாம் பதமடைவ னெறிமையினல்.

(இ-ள்.) கார் இயலும் குழல் மடவாய்!—மேகம்போலும் அளகத்தினை உடையாளே,

பொருள்களுக்குத் தூரியன் ஆய்—இருவகை மாயையினுள்ள பிரபஞ்சத்துக்கெல்லாம் அதீதனாய்,

துளக்கம் இலாது ஒன்று ஆகி—அசைவற்று ஒன்றாயிருப்பதாய்,

ஆரியம் ஆம் அநுபவம் ஆம் அதன்மேல் அன்பு உடைய அவன்—ஆநந்த ரூபமாய்ச் சிவாநுபூதியாயிருக்கிற அந்தப் பரமசிவத்தில் இரண்டற ஐக்கியத்தைப் பொருந்தியிருக்கிறவன்,

கருதானே ஆயிடினும் — மோட்சத்தை அடையவேண்டுமென்று இச்சியாமல் இருந்தானே ஆயினும்,

நேரியது ஆய் நித்தம் ஆம் பதம் நெறிமையினால் அடைவன் — அதிசூக்குமமாய் நித்தியமாயிருக்கிற சிவசாயுச்சியத்தை முறைமையால் அடைவன் எ-று.

இச்சையெல்லாந் துக்கத்துக் கேதுவாகையினாலும், விருத்தி ஞானமாகையினாலும், இச்சிக்க வேண்டுவதில்லை என்பது கருத்து. (அ)

கலாதிகள்முதலிய சர்வ வுபாதிகளோடு ங்கூடி விளங்குகிற ஆன்மாவினது விருத்தி ஞானத்தையும், சர்வ வுபாதிசூனியமாய் நிட்களமாயிருக்கிற சொரூபஞானத்தையும், அருளிச்செய்கின்றார்:—

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

உருவரு வாவ தியாதென் றுரைத்திடி னகங்கா ரந்தான், மருவிய வடிவ தாகும் வடிவது மறவே விட்டால், உருவிலாச் சத்திய த்தா லுலகெலாந் தோன்ற லாலே, பொருவிலாச் சத்தித் தியானம் பொருந்திட வுரைத்த தன்றே.

(இ-ள்.) உரு அரு ஆவது யாது என்று உரைத்திடின்—உருவமும் அருவமுமாயிருப்பது யாதென்று சொல்லுமிடத்து,

அகங்காரந்தான் மருவிய வடிவது ஆகும்—மாயையில் உண்டான கலையிலே விளங்கப்பட்டிருக்கிற சைதன்னிய துவாரத்திலே நான் போகி நான் கர்த்தா நான் சுகி நான் துக்கியென்கிற அபிமான சொரூபத்துடனேபற்றி யகங்கரிக்கின்ற சைதன்னிய சகளமென்றும் உருவமென்றுஞ் சொல்லப்படும்,

வடிவதும் அறவே விட்டால் உரு இலாச் சத்தி அத்தால் உலகு எலாம் தோன்றலாலே—இங்ஙனஞ் சொல்லப்பட்ட சர்வவுபாதிகளும் நீங்கினால் நிட்களமாய்ச் சித்துருபமாயிருக்கிற சத்தியென்று சொல்லப்படும் இந்தச் சத்தியால் பிரவஞ்சமெல்லாந் தோன்றுகையினாலே,

பொரு இலாச் சத்தித் தியானம் பொருந்திட உரைத்தது—ஒப்பற்றதாயிருக்கிற விந்து சத்தித்தியானம் பொருந்தும்படி வேதாகமங்களிற் சொல்லப்பட்டிருக்கிறது எ-று.

சகளமாவது ஆணவாதி பஞ்சபாசங்களுடனும் பிருதிவியாதி முப்பத்தாறு தத்துவங்களுடனும் தத்துவகாரியமான தாத்துவிகங்களுடனும் சூக்குமை முதலான நாலு வாக்குகளுடனும் பஞ்சகோசங்களுடனுங் கூடிச் சர்வவுபாதிசொரூபமாயிருக்கிற சைதன்னியமாம்; சகள மென்பது, உரு இந்தச் சர்வோபாதிகளோடுங்கூடி விளங்குகிற அறிவு ஆன்மாவினுடைய விருத்திஞானமென்று சொல்லப்படும். அன்று—ஏ—அசை. ()

இனிச் சொரூபஞானமேதென்னில், இங்ஙனஞ் சொல்லப்பட்ட சர்வோபாதிகளும்

விட்டுநீங்கி நிட்களமாய்ச் சித்துரூபமாயிரு
ப்பது. அதுவே மோட்சத்துக்கு விசேஷ
காரணமென் றருளிச்செய்கின்றார்:—

யானெனு மதனை நீக்கி யேகமாய் நின்ற
ஞானம், ஆனவவ் வொளியாய்த் தோன்று
மதுமுத்தி வித்து மாகித், தேனமர் கரிய
கூந்தற் செய்யவாய்ப் பரந்து நீண்ட, மான
மர் விழியாய் மேலாம் யோகவத் தகமு மா
மால்.

(இ-ள்.) தேன் அமர் கரிய கூந்தல் செய்
யவாய்ப் பரந்து நீண்ட மான் அமர் விழியா
ய்—வண்டுகள் தங்கிய கறுத்த அளகத்தை
யும் செவ்வாம்பல்போன்ற வாயினையும் வி
சாலமாய் நீண்ட மான்போலும் நோக்கத்தி
னையும் உடையாளே,

யான் எனும் அதனை நீக்கி ஏகம் ஆய் நின்
ற ஞானம்—யானென் றபிமானம் பண்ணிக்
கொண்டிருக்கிற அகங்காரத்தை நீக்கி ஒன்
றாகி நிற்கின்ற ஞானமானது,

ஆன அவ்வொளியாய்த் தோன்றும்—தற்
சொரூபத்தையும் விளக்கித் தற்பதார்த்தங்
களையும் விளக்கிச் சுவயம்பிரகாசமாய் விள
ங்கும்,

அது முத்திவித்தும் ஆகி—அந்தச் சொரூப ஞானந்தானே சிவசாயுச்சியத்துக்கு உத்தமமான காரணமும் ஆகி,

மேல் ஆம் யோக வத்தகமும் ஆம்—அந்த ஞானந்தானே மேலான சிவயோகப் பிரவிருத்தியைச் செய்விப்பதுமாம் எ-று.

"யானெனு மதனைநீக்கி யேகமாய் நின்ற ஞானம்" என்பதற்கு உதாரணம். சிவப்பிரகாசம். "பொற்புறு கருவியாவும் புணராமை யறிவிலாமைச், சொற்பெறுமதிதம்வந்து தோன்றுமைத் தோன்றிநின்ற, சிற்பரமதனுலுள்ளச் செயலறுத் திடவுதிக்கும், தற்பர மாகிநிற்றல் சாக்கிரா தீதந்தானே" என்பதனுற் கண்டுகொள்க. ஆல்-அசை. ( )

நிர்விசேஷமாய் நிர்க்குணமாய் நின்மலமாய் நிராமயமாய் நிட்களமாய் நிர்விகாரமாய்த் தத்துவாதீதமாய் அகண்டாகார சித்துரூபமாய் விளங்குகிற ஞானம் மோட்சத்துக்கு விசிட்டகாரணம். ஆகையினாலே, இந்த ஞானத்தையே மோட்சசாதகன் சாதித்துக் கொள்ளவேண்டும். இஃதன்றி, நாடி சக்கரமுதலான சாலம்ப யோகமான சர்வ விகற்ப வியாபாரங்களை விடக்கடவனென்று அருளிச்செய்கின்றார்:—

சக்கர நாடி சான்றோர் வழித்தெய்வ ரூப
மூலம், அக்கர மண்டலங்கண் ஞானம்போ
லழகின் றாகும், மக்கடோய் மாயா விச்சை
மந்திரம் பிராணு யாமம். தொக்கசிர் ஞான
ஞ்சேரத் தொடங்குவார் தொடங்க லாகா.

(இ-ள்.) சக்கரம் சான்றோர் வழித்தெய்
வம் ரூப மூலம் நாடி அக்கரம் மண்டலங்
கள் ஞானம்போல் அழகு இன்று ஆகும்—
மூலாதார முதலான ஆதார சக்கரங்களு
ம், நாலிதழ்முதலாகச் சகஸ்திர இதழ் முடி
வான பதுமங்களும், விநாயகன் முதலான
சடாதாரமூர்த்திகளும், அகாராதி சோடச
கலையொளிகளும், சுழுமுனை முதலான நாடி
களும், நகாராதி பகாராந்தமும் அகாராதி
உகாராந்தமுமான அக்கரங்களும், மண்டல
த்திரையங்களும், இங்ஙனஞ் சொல்லப்பட்
ட இவைகளைத் தியானிப்பது ஞானவுபாய
த்தைச் சாதிக்கிற சாதகனுடையுஞ் சிறப்பு
ப்போலச் சிறப்புடையதன்று, (ஆகையினா
லே)

மக்கள்தோய் மாயா விச்சை மந்திரம் பி
ராணுயாமம் தொக்கசிர் ஞானம்சேரத் தொ
டங்குவார் தொடங்கல் ஆகா — அபக்குவ
ராயிருக்கிற வான்மாக்கள் பொருந்தப்பட்

ட மாரணம் தம்பனம் மோகனம் ஆகருஷ ணம் உச்சாடனம் வசீகரம் உத்துவேஷண ம் பந்தனம் என்று சொல்லப்பட்ட அட்ட கன்மங்களும், அட்டகன்மங்களையுஞ் சாதிக் கிற மந்திர சமூகங்களும், பிராணாயாம முத லான யோகங்களும் ஆகிய இவைகளை நின் மலமாய் நிர்க்குணமாய் நிர்விசேஷமாய்ச் சித்துரூபாநந்தமா யிருக்கும் ஞானத்தை அ நுட்டிப்பவர் அநுட்டிக்க வேண்டுவதில்லை எ-று. (கக)

பூசிக்கப் படுகிறவனும் பூசிக்கிறவனுமா யிருக்கிற பேத விவகாரமானது சச்சிதாந ந்த பரிபூரணமாயிருக்கிற சிவைக்கியம்பெ ற்ற சீவன்முத்தருக்கு வேண்டுவதில்லையெ ன்று அருளிச்செய்கின்றார்:—

மந்திரஞ் செபந் தியானம் பூசனை வணக் கம் வேண்டா, அந்த மிலாத முத்திக் குபா யமே யறிய வேண்டும், சிந்தனை புறமே செ ல்விற் றுயரமே திரிய மீட்கின், பந்தமாந் துன்ப நீங்கிப் பரமான வின்பஞ் சேர்வார்.

(இ-ள்.) மந்திரம் செபம் தியானம் பூச னை வணக்கம் வேண்டா — ஞானசாதகருக் கு மந்திரஞ் செபம் தியானங்களும் சோட சோபசாரத்துடனே செய்யுஞ் சிவபூசைக

ளும் அஷ்டாங்க பஞ்சாங்க நமஸ்காரங்களுநும் வேண்டுவதில்லை,

அந்தம் இலாத முத்திக்கு உபாயமே அறிய வேண்டும்—வேண்டிய தேதென்னில், அழிவில்லாத சாயுச்சியத்தை அடைவதற்கு உபாயமாகிய மனநிரோதமே அறியவேண்டும்,

சிந்தனை புறமே செல்லின் துயரமே—சித்தமானது விடயங்களிலே சென்றால் சனனமரண முதலான துக்கமே உண்டாம்,

திரிய மீட்கின் பந்தம் ஆம் துன்பம் நீங்கிப் பரம் ஆன இன்பஞ் சேர்வார்—சித்தம் புறம்போகாமல் தடைபட்டால் இருநூற்றிருபத்துநாலு புவனங்களிலிருக்கிற சரீரங்களிலேயுள்ள பந்தமாயிருக்கிற சனன மரணதுக்கம் நீங்கிச் சிவசாயுச்சியத்தை அடைவர் எ-று. (கஉ)

நித்தியமாய் அகண்டாகார சித்துபரூமாயிருக்கிற சீவன் முத்தருக்கு அநித்திய அவ்வியாபக சரீரமுதலான தோஷங்கள் இல்லையென்று அருளிச்செய்கின்றார்:—

புறனகங் கீழ்மேல் பக்கம் புணர்வதோர் பொருளு மில்லைத், திறனுடை யுருவ மெல்

லாந் தானாகித் தேக மின்றாய், அறன்முறை யடங்கு ஞான யோகிக ளறியப் பட்ட, விறன்மலி ஞானாநந்த மேன்மையாய் விளங்கா நிற்கும்.

(இ-ள்.) புறன் (இல்லை)—விபுவாய்ச் சித்துரூபாநந்தமாய் அறியப்படும் பொருளுந் தானாயிருக்கிற அவதரத்திலே புறம்பே உள்ள சத்தாதிவிடயங்களை இலக்காகப் பற்றுவது சற்றும் இல்லை,

அகம் (இல்லை)—அகங்காரத்துடனே கூடி நான் போகி நான் கர்த்தா நான் சுகி நான் துக்கி என்று அபிமானிக்கப்பட்ட அகங்காரங்களுமில்லை,

கீழ் மேல் பக்கம் புணர்வது ஓர் பொருளும் இல்லை—மூலாதாரம் இருதயம் பிரமரந்தரம் பக்கங்கள் ஆகிய இந்தத் தானங்களிலே தியானிக்க வேண்டுவதும் இல்லை,

திறனுடை உருவம் எல்லாம் தான் ஆகி—மந்திரம் பதம் வன்னம் புவனம் தத்துவம் கலை ஆகிய ஆறத்துவாவினுள்ள வடிவுகளெல்லாந் தன்மயமாகி,

தேகம் இன்று ஆய்—சரீர மில்லையாய்,

அறன் முறை அடங்கும் ஞான யோகினுல் அறியப்பட்ட விறல்மலி ஞானுநந்தம் மேன்மை ஆய் விளங்கா நிற்கும்—சரியை கிரியை யோக முதிர்ச்சியில் அடங்கிய ஞான யோகத்தினுல் அறியப்பட்ட சச்சிதாநந்த சிவாநந்ய சாட்சாத்காரம் மேம்பாடாக விளங்காநிற்கும் எ-று. (கரு)

புருடனுனவன் சிவாகமத்திற் சொல்லப்பட்ட அளவிறந்த மூர்த்திபேதங்களிலும், அந்நிய சமயங்களிற் சொல்லப்பட்ட மூர்த்திபேதங்களிலும், எந்தெந்த மூர்த்திகளைப் பொருளாக நிச்சயித்து ஆராதனைபண்ணுகிருனே அந்தந்த மூர்த்திபுவனத்தை அடைகுவன். ஆகையினுலே, மந்திராதீதமாய்ச் சர்வோபாதி சூன்யமாய் நிராகாரமாய் நிராலம்பமாயிருக்கிற வஸ்து ரூபத்தையே பாவிக்கவேண்டுமென்று அருளிச்செய்கின்ருர்:—

கலிவிருத்தம்.

எந்த வாருயிர் யாதோர் பொருளினைச்
சிந்தையாற் பற்றிக் காரியஞ் செய்திடின்
அந்த யோனிய தாமென் றறிவினுல்
பந்தமில் பொருள் பற்றுத றக்கதே.

(இ-ள்.) எந்த ஆர் உயிர் யாது ஓர் பொருளினைச் சிந்தையால் பற்றிக் காரியம் செய்திடின்— எந்தச் சீவன் யாதொரு மூர்த்தியைப் பொருளாக நிச்சயித்து அந்தந்த தேவதைகளுக்கேற்ற கன்மங்களைச் செய்தானாயின்,

அந்த யோனி அது ஆம் என்று அறிவினால் பந்தம் இல் பொருள் பற்றுதல் தக்கதே— அந்தந்த மூர்த்திகள் இருக்கிற தானத்திலே செனிப்பன் என்று கருதி, சொரூப ஞானத்தினாலே சர்வோபாதி சூனியமாயிருக்கிற பரமசிவ ஐக்கியத்தை நாடுதலே தகுதி எ-று.

"அந்தயோனியதாம்" என்றது, பஞ்சபூத முதலாகச் சிவதத்துவமுடிவாயிருக்கிற முப்பத்தாறு தத்துவங்களிலே எந்தெந்தத் தத்துவத்தை ஆன்மசொரூபம் என்று நிச்சயித்தார்கள்.— அந்தந்தத் தத்துவபுவனத்தில் உலகாயதன் முதல் சிவாத்துவிதியீறுகிய சமயிகளாகச் செனிப்பார்கள். ஆகையினாலே, தத்துவாதீதமாயிருக்கிற பரமசிவத்தையே தியானிக்கக்கடவர். யாதொரு சமயிகள் அந்தந்தச் சமயங்களிலே உள்ள ஆசாரானுட்டானங்களுக்கு யோக்கியமாயிருக்கிற அந்த

ந்த மூர்த்திகளுடைய பதப்பிராப்தியை அடைவார்கள். அஃது எங்ஙனம் என்னின், கௌளர்க்குப் பைசாசபதமும், சோதிரிடிகள் பூர்வமீமாம்சிகள். இவர்களுக்குத் தூலமாயிருக்கிற பஞ்சபூதபுவனமும், சுமார்த்தர்க்குத் தன்மாத்திரைபுவனமும், இந்திரியமே ஆன்மாவென்கிற சமயிகளுக்கு இந்திரியபுவனமும், மனமே ஆன்மாவென்கிற ஞாயவாதிகளுக்கு மனதத்துவபுவனமும், அகங்காரமே சைதன்னியம் என்கிற வைசேடிகனுக்கும் பிராணவாயுவே சைதன்னியம் என்கிற யோகிகளுக்கும் அகங்காரதத்துவபுவனமும், புத்தன் நையாயிகன் சௌத்திராந்திகன் யோகாசாரன் வைபாடிகன் மாத்துமிகன் இவர்களுக்குப் புத்திதத்துவபுவனமும், நிகண்டவாதிக்குப் பொன்னெயில் வட்டமும், சமணனுக்கும் சாத்துவிதகுண சைதன்னியவாதிக்கும், குணதத்துவ புனவமும், பாஞ்சராத்திரிக்குப் பிரகிருதி தத்துவ புவனமும், மாயாவாதி பாற்கரியன் நிரீச்சுரசாங்கியன் பாதஞ்சலியன் இவர்களுக்குப் புருடதத்துவபுவனமும், புராணிகர்க்கு இராகதத்துவ புவனமும், காபாலிகளுக்குக் காலதத்துவபுவனமும், பாசுபதவாதி உற்பத்தி யாவெச சாம்மியவாதி சங்கிராந்த சா

ம்மியவாதி இவர்களுக்கு மாயாதத்துவபுவனமும், மகாவிரதிக்குச் சுத்தவித்தியாபுவனமும், சிவப்பிரயோச்சியவாதி ஈசுவர வுதாசினவாதி, முத்தாத்மாக்களே கர்த்தாவென்கிற ஈசுரவாதி, இவர்களுக்கு ஈசுவர தத்துவபுவனமும், சக்திபூசை பண்ணுகிற சாத்தேயர்க்குச் சத்திதத்துவ புவனமும், கருடவைரவ வாமபூத தந்திரவாதிகளுக்கு நிவிர்த்தியாதிபுவனமும், சிவசமயவாதிக்குச் சிவதத்துவபுவனமும் பிராப்தியாம் என்பதனுலென்க. (கசு)

இந்தச் சீவன்முத்தன் வியாபகனு யிருக்கையினலே சர்வத்தையும் சிருட்டிக்கிருனென்றும், சர்வ காரணனுயிருக்கிருனென்றுஞ் சொல்லுகிற உபசாரத்தைச் சுபாவமாக எண்ணிப்பாற் கரியன்முதலான சமயிகள் சித்துத் தானே அசித்தாகப் பரிணமிக்கும் என்கிற கருத்துக் கூடாதென்று ஆதார நிராதார சொரூபங்களை அருளிச்செய்கின்ருர்:—

கொச்சகக்கலிப்பா.

கன்மபல மேதுமில்லைச் சுபாவமே காணுங்கால், தொன்மையுல குயிரில்லைத் தோன்றுவதெல் லாமசத்து, நன்மையினைத் தோ

ற்றுவித்துப் பற்றிலதாய் நணுகரிய, தென்னவறிந் தானுலகு மிலதாகிச் சுத்தனுமாம்.

(இ-ள்.) கன்ம பலம் ஏதும் இல்லை—சுத்தாசுத்தமாயா அங்குரத்துக்குக் காரணமாயிருக்கிற ஆணவமலமில்லை, கன்மத்துக்கீடாக வருகிற தநு கரண புவன போகங்களும் இல்லை, புண்ணியபாவங்களும் இல்லை,

சுபாவமே காணுங்கால்—ஞானக்கண்ணினாலே சித்துருபமாயிருக்கிற ஆன்மசுபாவத்தையே பார்க்குமிடத்து,

தொன்மை உலகு உயிர் இல்லை—பழமையாயிருக்கிற சர்வலோகங்களும் அதிலே உள்ள உயிர்களும் இல்லை,

தோன்றுவது எல்லாம் அசத்து—இருவகை மாயையிலே தோன்றப்பட்ட மாயா காரியங்கள் எல்லாம் பொய்யாய் அழிந்து போம்,

நன்மையினைத் தோற்றுவித்துப் பற்று இலது ஆய் நணுக அரியது என்ன அறிந்தான் உலகும் இலதாகிச் சுத்தனும் ஆம்—நன்மை ஆகிய ஆதார நிராதாரயோகங்களைப் பிரகாசிப்பித்து, மீதானமாய் நிராலம்பமாய் யாவராலும் பொருந்துதற்கரியதா யிருக்கி

ற பரமசிவ ஐக்கியத்தை அறிந்தவன் பிரவஞ்சப்பற்றும் இன்றி நின்மலனாவன் எ-று ()

உலோக லௌகிகத்துக்குப் பின்னமாய் நிரூபாதியாயிருப்பதற்கு ஏது சொல்லுகின்றார்:—

நிருபாதி பரசிவந்தான் நிகழ்சடாத் துவாக்கள், வருமாறு தோற்றுவித்த மாயையிரண் டருவாய், ஒருவாம லறுவகையி னுட் புறம்பு முறல்போல், பெருஞான சிவன்முத்தர் பிறங்குவர்நிங் கலுத்தே.

(இ-ள்.) நிருபாதி பரசிவந்தான் நிகழ் சடாத்து வாக்கள்—உபாதி ரகிதனாயிருக்கிற பரமசிவனாலே விளங்காநின்ற சடாத்துவாக்களும்,

வரும் ஆறு தோற்றிவித்த மாயை இரண்டு அரு ஆய் — தோன்று முறைமையிலே தோற்றுவிப்பதற்கு உபாதான காரணமாயிருக்கிற சுத்தமாயை அசுத்தமாயை இரண்டும் நிராகார சொரூபமாய்,

ஒருவாமல் அறுவகையின் உள் புறம்பும் உறல் போல்—ஒழியாமல் மந்திரம் பதம் வன்னம் புவனம் தத்துவம் கலையாயிருக்கிற ஆறத்துவாவுக்குள்ளும் புறம்பும் ஒழிவ

றநிறைந்து காணப்படாம லருவாய் நிற்ப துபோல,

பெரு ஞான சீவன் முத்தர் ஈங்கு அறுத்தே பிறங்குவர்—பேரறிவையுடைய சீவன் முத்தர்கள் ஆணவாதி சகல உபாதிகளையும் ஞானவாளாலறுத்து, ஆறத்துவாவுக்குள்ளும் புறம்பும் ஒழிவறநிறைந்து, நிராகார சுவரூபமாய் விபுவாய் விளங்கா நிற்பார்கள் எ-று. (கசு)

உபாதியுடனே கூடினவன் சிருட்டிகன்மத்துக்குள்ளே அகப்படுவனென்று திட்டாந்தமாக அருளிச்செய்கின்றார்:—

கலிவிருத்தம்.

வானம் போல வடிவில தாயெங்கும்
ஆன தாகத் தியானம்பண் ணுதவன்
கானந் தன்னி லுலண்டெனக் கட்டுப்பட்
டூன மான பிறப்பிறப் பெய்துமே.

(இ-ள்.) வானம் போல் வடிவு இலது ஆய்—சிதாகாசம்போல மகா சூனியமாய்,

எங்கும் ஆனது ஆக—பிருதிவியாதி சிவதத்துவ முடிவான தத்துவ தாத்துவிகங்களை வியாபித்துக்கொண்டு பரிச்சின்னமில்லாமல் விபுவாயிருக்கிறதாக,

தியானம் பண்ணுதவன்—சிவாநந்திய சாட்சாத்கார பாவனை பண்ணுதவன்,

கானந் தன்னில் உலண்டு என்னக் கட்டுப்பட்டு ஈனம் ஆன பிறப்பு இறப்பு எய்தும்—கானகத்தில் உலண்டென்னும் புழுவானது நுண்ணிதாகிய நூலிழைத்துத் தான் புறப்பட்டுப்போக வழிகாணுமல் இறக்குந்தன்மைபோல, இவனும் பஞ்சபாசங்களினுலும் தத்துவ தாத்துவிகங்களினுலும் பந்தப்பட்டு ஈனமாகிய சனனமரண துக்கங்களை அடைவன் எ—று.

"சூனியம்" என்றது நிராகார வஸ்துவை, மகாசூனியம் என்றது விந்துமாயாதி நிராகாரவஸ்துகளை அடக்கிக்கொண்டு நிற்கிறவஸ்துவை. ஆகையினுலே, ஆணவாதி சர்வோபாதி சூனியமாயிருக்கிற சிதாகாசத்தைப் பாவிக்கக் கடவன் என்பது கருத்து. "உலண்டு" என்பது வீசகோசக் கிருமிக்கும் ஆம். சாணகாதி வித்திலிருக்கிற கிருமிவிதையைக் கூடாக்கிக்கொண்டு அதிற் சிறிது புசித்து மற்றதையும் மேற்புசிப்போமென்றிருக்கும். விதைவிதைக்கிற காலத்தில் அந்த விதையை நனைத்தபோது அக்கினி வாயு தண்ணீர் இவற்றின் யோகத்தால் மரித்து, மீ

ளவும் அந்தவித்து விளைந்தபோது அதனுட்னே உற்பத்தியாய் மாய்ந்து, இவ்வாறு இடைவிடாமல் அளவிறந்த காலம் சனனமரணப்பட்டுவரும். அதுபோல ஆன்மாவும் பாசபந்தத்தாற் சனனமரணப்பட்டு வரும் என்க. ஏ-ஈற்றசை. (௧௭)

சாலம்பத்தை ஆதரித்தால் துக்க ஏதுவாமென்றும், துக்க நிவர்த்தியின்பொருட்டு நிராலம்பத்தை ஆதரிக்க வேண்டுமென்றும் அருளிச்செய்கின்றார்:—

யாவ ராயினு மெப்பிறப் பெய்தினும்
ஆவ தாவ தருந்துய ராதலால்
தீய துன்பஞ் செறுத்தற் பொருட்டந்த்
தூய ஞானச் சுடரைத் தொடர்வரோ.

(இ-ள்.) யாவர் ஆயினும்—விஞ்ஞான கலர் பிரளயாகலர் சகலரொன்று சொல்லப்பட்ட மூவகை யான்மாக்களுள் எவர்களாயினும்,

எப்பிறப்பு எய்தினும்—எண்பத்து நான்கு நூறாயிரம் யோனி பேதங்களில் எந்தெந்த யோனியிற் செனித்தாலும்,

ஆவது ஆவது அருந் துயர் ஆதலால்—அந்தந்த யோனியிற் செனிக்கு மிடங்களிலேஆவது அரிய துயரமே ஆதலால்,

தீய துன்பம் செறுத்தல் பொருட்டு—பொல்லாத துன்பங்களையெல்லாங் கெடுப்பது நிமித்தமாக,

அந்தத் தூயஞானச் சுடரைத் தொடர்வர்—நின்மல ஞான சொரூபமாயிருக்கிற அந்தப் பரமசிவ ஐக்கியத்தையே பொருந்துவர் எ—று. ஏ—ஈற்றசை. (௧அ)

உபாதியோடு கூடினதாகச் சொல்லப்பட்ட சரியை கிரியை யோகங்களை விட்டுச் சன்மார்க்கிரங்களிற் சிவாகமங்களிற் சொன்னபடியே அநுட்டித்ததனால் ஞானத்தைப் பொருந்தினவன் அச்சரியை கிரியை யோகங்களைவிட்டுப் பரமசிவ பாவனையே பண்ணிக்கொண்டிருக்கக் கடவனென்று அருளிச்செய்கின்றார்:—

௧௯ வேறு.

கருமமுஞ் சரியையுங் கழறப் பட்டதவ்
வருமைசேர் ஞானத்தை யடைவ ராதலால்
இருமையி லியோகமு மெய்த லின்றியே
திருமலி பரம்பொரு டன்னைச் சிந்திப்பார்.

(இ-ள்.) கழறப் பட்டது சரியையும் கருமமும் அவ் வருமை சேர் ஞானத்தை அடைவர் ஆதலால்—சொல்லப்பட்ட சரியை கிரியா யோகங்களை அநுட்டிக்கிறவர்கள் எ

ல்லாம் நிர்விசேஷமாய்ப் பெறுதற் கரிதாயி ருக்கிற ஞானத்தைப் பொருந்துவர், ஆகை யினால்,

இருமை இல் யோகமும் எய்தல் இன்றி —பிராணாயா மாதிகளோடுங் கூடியிருக்கிற சாலம்ப யோகத்தைவிட்டு,

திருமலி பரம்பொருள் தன்னைச் சிந்திப் பார்—சகளம் சகள நிட்கள மென்று சொ ல்லப்பட்ட சொரூபங்களுக்கெல்லாம் வே றாகிச் சச்சிதாநந்த பரிபூரண பரமசிவ பா வனையே பண்ணுவார்கள் எ—று.

“சரியை” ஆவது சிவாலயந்திருவலகிடுத ல், திருமெழுகிடுதல், திருநந்தனவன மூண் டாக்குதல், திருப்பணிசெய்தல், திருவிளக் கிடுதல், திருமாலை திருவாபரணம் திருமேற் பூச்சு திருமஞ்சனம் திருக்கோயில் நியமம் சிவதுதி சிவனடியார்க் கேவல் இவைமுதலி யன செய்தல் ஆம். கிரியை ஆவது கிரியா பாதத்திற் சொல்லப்பட் டிருக்கிறமந்திரோ த்தாரணம் பூசை செபம் சமயம் விசேடம் நிருவாணம் ஆசாரியா பிடேகம் சாத காபி டேகம் சபீசம் லோகதன்மணி சிவதன்ம ணி பவுதீக நயிட்டிகாதி அநுட்டானங்கள் இவை முதலியனவற்றை ஞானோற்பத்தி நி

மித்தமாகச் செய்வது. இவை காமிகாகம முதலாக வாதுளாகம முடிவாக இருபத்தெட்டுத் திவ்வியாக மத்திலும் அநுக்கிரகம் பண்ணுவோர் அநுக்கிரகம் பண்ணப் படுவோர் ஆகிய இவர்கள் தார தம்மியத்துக்கீடாகச் சிவபெருமானால் திருவாய் மலர்ந்தருளப்பட்டன. அவ்வருமை சேர் ஞானத்தை யடைவதொன்றது. அருமையாக அதையும் அவ்வகண்டாகார சச்சிதானந்த சிவாநந்நிய சாட்சாத்கார ஞானம் விளங்கும் பொருட்டாக ஆதலால், இருமையிலி யோகமுமெய்தலென்றது. இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதியென்று சொல்லப்பட்ட அட்டாங்க யோகங்களை, இஃது அணிமா ஆதியா யிருக்கிற அட்டமா சித்திகளுக்குக் காரணமாயிருக்கும் என்க. (கக)

சுத்தமாயை அசுத்தமாயையி லுள்ளபோகங்களில் ஆசைவிட்டா லொழிய நிராலம்ப யோகங் கூடாதென்று அருளிச் செய்கின்றார்:—

௯ வேறு.

சத்தி பாதலங் தான்முத லீறதா
வைத்த வைய மெலாமசத் தாதலால்

மெய்த்த ஞானத்தி னாலிவை விட்டவர்
சுத்த மாகிய சூனிய வாதிகள்.

(இ--ள்.) பாதலம் முதல் சத்தி ஈறது ஆ வைத்த வையம் எலாம் அசத்து ஆதலால்—காலாக்கினி ருத்திர புவன முதலாகச் சத்தித்தத்துவ முடிவிலிருக்கிற அநாசிருத புவனம் ஈறாக இருநூற்றிருபத்துநாலு புவனங்களும் ஒன்றுக் கொன்று விசேஷமாய்ச் சுத்தமும் அசுத்தமும் சுத்தாசுத்தமுமா யிருக்கிறபேர்கள் பற்றுதலுக் கேதுவாய் அநித்தியமா யிருக்கையினாலே,

மெய்த்த ஞானத்தினால் இவை விட்டவர்—உண்மையாகிய சிவ ஞானத்தினால் இங்ஙனஞ் சொல்லப்பட்ட பிரபஞ்ச உபாதியெல்லாம் விட்டு நீங்கினவர்கள்,

சுத்தம் ஆகிய சூனியவாதிகள்—நின்மலமாயிருக்கிற சாட்சாத் காரத்தை அறிந்தவர்கள் எ—று.

சூனிய மென்றது சிருட்டி முதலான நான்கு கிருத்தியங்களும் இல்லாததாய் அநுக்கிரகம் பண்ணுகிற சொரூபமாய் நிராகாரமாய்ச் சர்வோபாதிசூனியமாயிருக்கிற சிவத்தை என அறிக. தான்--அசை. (௨0)

சித்தசலனம் போகத்திற் பற்றுதலுக்கே துவென்று திட்டாந்தமாகச் சொல்லுமிட த்து நிராலம்பத்தில் நிர்ச்சலனமாயிருக்கிற மனந்தானே மோட்சத்தை அடைவதற்கு யோக்கியமென்று அருளிச்செய்கின்றார்:—

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மருவிய பொருண்மே லன்பாய் வானரம் போற்ச ரித்துத், திரியுமச் சித்தந் தன்னைத் திருத்திச் சூனியத்தே நின்றால், மருவினோ ர் பிரித லின்றி வானவ ரறிவுக் கெட்டாப், பொருவிலா நித்த சுத்தப் பொருளினை ய டைவ ரன்றே.

(இ—ள்.) மருவிய பொருள்மேல் அன்பு ஆய் — திவ்வியமா யிருக்கிற சுத்தாசுத்த போகங்களிற் பற்றுதலாய்,

வானரம்போல்—மிகவும் ரசத்தை யுடையதாய்ப் பக்குவமாய்ப் பழுத்த பழங்களையு டைய சாகையில் தொங்கி இடை விடாம ல் ஒன்றைவிட் டொன்றைப் பற்றிக்கொண் டு உதாரக்கினியினால் வருத்தப்படுகிற வா னரம்போல,

சரித்துத் திரியும் அச்சித்தந்தன்னைத் திருத்திச் சூனியத்தே நின்றால்—முன்சொன்ன சுத்தமாயை அசுத்தமாயா போகங்களிலே

பற்றியிருக்கிற ஆசையினால் பர பரப்பாய்ச் செல்லுகின்ற சித்தத்தை மீட்டுச் சர்வோ பாதி சூனியமாய்ச் சச்சிதாநந்த பரிபூர ணமாய் விளங்கும் சிவத்திலே நிலைபெறப் பண்ணினால்,

மருவினோர் பிரிதல் இன்றி வானவர் அறி வுக்கு எட்டாப் பொரு இலா நித்த சுத்தப் பொருளினை அடைவர்—அங்ஙனம் பொரு ந்தினவர்கள் பிரிவற்றதாய்த் தேவர்கள் அறி வுக்கு எட்டாததாய் உவமையில்லாததாய் நித்தியசுத்தமா யிருக்கிற சிவ சாயுச்சியத் தை அடைவர்கள் எ—று.

சித்தமென்பது பஞ்சபாசங்களை நீக்கி நி ன்மலமாயிருக்கிற ஆன்மசைதன்னியத்தை என்றறிக. (உ—ம்.) திருவாசகம். "புத்தர் முதலாய புல்லறிவிற் பல்சமயந், தத்தம த ங்களிற் றட்டுளுப்புப் பட்டுநிற்கச், சித்தஞ் சிவமாக்கிச் செய்தனவே தவமாக்கு, மத்த ன் கருணையினாற் றோணோக்க மாடாமோ" என்பதனாற் கண்டுகொள்க. அன்று — ஏ— அசை. (உக)

பரமசிவ சாயுச்சியத்துக்கு யோக்கியமா யிருக்கிற ஆன்மாவினுடைய சுபாவசொரு பத்தை அருளிச்செய்த பின்பு தத்துவ தா

துவிகங்களுடனேகூடி அதோமுகமாயிருக்கிற வியாபாரத்தை ஒழிந்தவன், சொச்சுரூபலாபகாலத்துக்கு மேலாயடையப்பட்ட ஞானத்திஞல், நிருபாதியாய் நிர்விசேஷமாய்ச் சிற்கனமாயிருக்கிற பரவஸ்து தெரிசனத்தால் அடைந்த தன்னுடைய சுகத்தை உடையவனென்று அருளிச்செய்கின்றார்:—

மேலாய வின்ப மாகி விண்போலுட் புறம்ப தாகிக், காலாகித் தத்துவங்கள் கலவாது காய மின்றி, மாலாய கரண மின்றி யறிவாகி யெங்குங் காணும், சீலாய ஞானஞ் சேர்ந்தோர் திரியா வாநந்தி யாவார்.

(இ-ள்.) கால் ஆதித் தத்துவங்கள் கலவாது காயம் இன்றி மால் ஆய கரணம் இன்றி அறிவாகி எங்கும் காணும்—சுத்தாவத்தையை அடைந்தவனது சைதன்னியமானது காலமுதலான தத்துவ தாத்துவிகங்களுடனே கூடாததாய்த் தூலசூக்கும சரீரங்களில்லாததாய்ச் சூக்கும சரீரத்துடனேகூடி நானென்கிற சங்கற்ப விகற்ப சமூகமாகிய கரணங்களும் இல்லாததாய்ச் சித்துரூபமாய் எல்லாவற்றையும் காண்பதாயிருக்கும்,

விண்போல் உள் புறம்பது ஆகி—ஆகாசமானது கடபடாதி முதலான வஸ்துகளிலே

உள்ளும் புறம்பும் வியாபித் திருப்பதுபோலச் சடாத்துவாக்களிலே உள்ளும் புறம்பும் வியாபித்திருப்பதாய்,

மேலாய இன்பம் ஆகி—நாத விந்துவாதிரூபரகிதமாய் இந்த ஆநந்தத்துக்கு மேலாய் நிரதிசயாநந்த ரூபமாய் இருக்கிற பரமசிவரூபத்தை,

சீலாய ஞானம் சேர்ந்தோர் திரியா ஆநந்தி யாவார்—மேலான ஞானக் கண்ணினாலே சாட்சாத்காரம் பண்ணினவர்கள் விட்டுநீங்காத பரமாநந்த போகத்தை உடையவராவர் எ—று. (உஉ)

மனோலயமா முறைமையைத் திருட்டாந்தமாக அருளிச்செய்கின்றார்:—

கலிவிருத்தம்.

மூண்டு பற்றி முழங்கி யெழுங்கனல்
ஈண்டு காட்ட மிலதே லிலதாகும்
தீண்டு மப்பொரு ளின்றெனிற் சித்தமும்
மாண்டு தோற்று மிலதாய் மடிந்திடும்.

(இ—ள்.) மூண்டு பற்றி முழங்கி எழும் கனல் ஈண்டு காட்டம் இலதேல் இலது ஆகும்—மூண்டு விறகிலேபற்றி ஆரவாரித்தோங்கிய அக்கினியினிடத்து விறகில்லா விட்

டால் அந்த அக்கினிதானே அவியும், (அதுபோல)

நீண்டும் அப்பொருள் இன்று எனில் சித்தமும் மாண்டு தோற்றம் இலது ஆய் மடிந்து இறும்—சிவாநந்நிய ஐக்கியத்தை அடைந்து சிவமே யாயிருக்கிற சீவன் முத்தனுக்குப் பிரவஞ்ச விடயமில்லாமையினாலே மனம் தானே லயமாம் எ—று. (உகூ)

அநாதி யாகிய ஆணவசத்தியோடு கூடியிருக்கிற ஆன்மாவினது விருத்தி ஞானம் விளங்காதபடி மாயையின்கண் உண்டான குணத்திரைய சொரூபமான சுழுத்தியாதி அவத்தைகளின் கூட்டங்களுக்கு வேறாகக் கொண்டிருப்பதே யோக்கியமென்று அருளிச்செய்கின்றார்:—

மோக மூர்ச்சிகை மாயை முதற்கண
வாய சாக்கிர மல்லாச் சுழுத்தியும்
ஏய வெண்ணு மவத்தைக ளியாவையும்
வீய நோற்பவர் வீடு விடாதவர்.

(இ—ள்.) மோகம்—இருவகை மாயையின்கணுள்ள போகங்களிற் பற்றும்,

மாயை—அநான்மாவாயிருக்கிற தேகேந்திரிய மனம் புத்தி ஆங்காரஞ் சித்தமுதலான மாயாகாரியங்களை ஆன்மாவென்று அபி

மானிப்பது அன்றியும், பஞ்சபூத பரிணாம சொரூபமாகிய தேகதன்மத்தையும், இந்திரிய தன்மத்தையும், அந்தக்கரண தன்மத்தையும், குணத்திரைய தன்மத்தையும், பிராணவாயு முதலான வாயுக்களின் தன்மத்தையும், சுகதுக்கமோகாதியாயிருக்கிற புத்திதன்மத்தையும், ஆன்மதன்மமென்றுரோபிப்பதாகிய மாயையும்,

ஆய சாக்கிரம்—சோத்திராதி இந்திரியத்துவாரத்திற் பிரவேசித்து விடயங்களிற் பற்றப்பட்ட மனத்தோடு கூடியிருக்கிற சாக்கிராவத்தையும்,

முதல் கனவு—சாக்கிராவத்தையி லனுபவித்த அர்த்தங்களை நினைக்கும் அந்தக் கரண வியாபாரமாயிருக்கிற சொப்பனமும்,

அல்லாச் சுழுத்தியும்—தாமத குணத்தால் நிரோதிக்கப்பட்டிருக்கும் மனோரூபமாகிய சுழுத்தியும்,

மூர்ச்சிகை—ஆன்ம சைதன்னியத்தை நிரோதித்து மூர்ச்சையைப் பண்ணா நிற்கும் மலசத்தியினால்வரும் கேவலவத்தையில் அதீதமும் துரியமும்,

ஏய எண்ணும் அவத்தைகள் யாவையும் வீய நோற்பவர் வீடு விடாதவர்—இங்ங

னம் சொல்லப்பட்ட கீழாலவத்தை ஐந்தும், மத்தியாலவத்தை ஐந்தும், உணர்த்துமுறைமையாகிய சகலாவத்தை ஐந்தும் என்று சொல்லப்பட்ட அவத்தைகளெல்லாம் கெடும்படி, சச்சிதாநந்த சிவாநந்நிய சாட்சாத்கார ஐக்கியத்தை அநுசந்தானம் பண்ணிக்கொண்டிருக்கும் சீவன்முத்தரோ பரமசிவ சாயுச்சியத்தை அடைவர் எ-று.

கீழா லவத்தை ஐந்தும், மத்தியா லவத்தை ஐந்தும் வருமாறு.—கேவலத்திற் சாக்கிரம், கேவலத்திற் சொப்பனம், கேவலத்திற் சுழுத்தி, கேவலத்தில் துரியம், கேவலத்தில் துரியாதீதம் என்னும் இவ்வைந்தில், கேவலத்தில் சாக்கிரமாவது—ஆன்மா முப்பத்தாறு தத்துவங்களுடனும் தாத்துவிகங்களுடனுங்கூடச் சகலவிடயபோகங்களையும் அநுபவித்துக்கொண்டிருக்கும் அவதரத்தில் போக ஏதுவால் கன்மமில்லாதிருக்கையால் பிரேரககாண்டமாகிய சுத்ததத்துவங்கள் ஐந்தும், போக காண்டமாகிய கலாதிகள் ஏழும் நீங்கச் சோத்திரந் தொக்கு சட்சு சிங்நுவை ஆக்கிராண மென்னும் ஞானேந்திரியம் ஐந்தும், வாக்குப் பாதம் பாணி பாயுரு உபத்த மென்னும் கன்மேந்திரியம் ஐந்தும், சத்த பரிச ரூப ரச கந்தமென்னும் த

ன்மாத்திரிகள் ஐந்தும், வசன கமன தான
விசர்க்கமாநந்தமென்னும் தாத்துவிகமாகிய
வசனாதி ஐந்தும், பிராணன் அபானன் சமா
னன் வியானன் உதானன் நாகன் கூர்மன் கி
ரிகரன் தேவதத்தன் தனஞ்சய னென்னும்
தாத்துவிகவாயுக்கள் பத்தும், மனம் புத்தி
ஆங்காரம் சித்தமென்னும் அந்தக்கரணங்க
ள் நான்கும், ஆகிய இந்த முப்பத்துநான்கு
கருவிகளுடனே க்ஷேத்திரக்கியனாகிய ஆன்
மாவுங்கூடி முப்பத்தைந்தாய்ச் சாக்கிரத்தா
னமாகிய லலாடத்தினின்று பிரேரிக்கிற த
த்துவமும், புசிப்பிக்கிற தத்துவமும், தாரக
மாகிய பூதங்களும் நீங்குகையால், ஆணவமே
விட்டுக் கண்டுங்காணாமல் கேட்டுங்கேளாம
ல் மயங்கியிருக்கும் அவதரம்; கேவலத்தில்
சொப்பனம், புறத்தில் விடயங்களைக் கிரகிக்
கும் ஞானேந்திரியமைந்தும், கன்மேந்திரிய
மைந்தும் ஆகப்பத்தும்நீங்க, நின்ற சத்தாதி
ஐந்தும், வசனாதிஐந்தும், பிராணாதிபத்தும்,
மனாதிநான்கும், ஆக இருபத்துநான்குடனு
ம், க்ஷேத்திரக்கியனுங்கூட இருபத்தைஞ்சா
ய்க் கண்டத்தானத்தில் நின்று சாக்கிரத்தி
ல் அனுபவித்த போகத்தில் நினைவும், தற்
காலத்தில்வரும் சூக்குமதேக போகமாகிய
ஆனையேறிமாலை சூடுதல் முதலானவற்றை

யனுபவிப்பது; கேவலத்திற் சுழுத்தி, சொ
ப்பனா வத்தையிற் கூடியிருந்த இருபத்து
நான்கு கருவியில் வாயுக்களிற் பிராண
வாயுவும், அந்தக் கரணங்களிற் சித்தமும்
நிற்க, மற்ற இருபத்திரண்டும்நீங்க அவ்விர
ண்டுடனே க்ஷேத்திரக்கியனுங்கூடி இருதய
த்தில் நின்று சுகமாகத் தூங்குவது; கேவல
த்தில் துரியம், இதிற் சித்தம்நீங்க உசுவாச
ம் நிசுவாசம் பண்ணிக்கொண்டு தேகத்துக்
குக் காவலாகஇருக்கும் பிராண வாயுவுட
னேகூடி நாபித்தானத்தில் நின்று ஒன்றுந்
தெரியாமல் தூங்குவது; கேவலத்தில் துரி
யாதீதம், பிராணவாயு நாபித்தானத்தில் நிற்
கச் க்ஷேத்திரக்கியனாகிய ஆன்மாவொன்றுந்
தனித்து மூலாதாரத்திலே ஆணவ மலத்து
டனேகூடி ஓரறிவுமின்றி வியாபியாயிருப்ப
து; அந்த அதீதாவத்தைதானே நித்திய கே
வலாவத்தை; இதற்கே கீழாலவத்தையென்
றும்பெயர்; இனிச் சகலத்தில் மத்தியாலவ
த்தை வருமாறு லலாடத்தில்நின்று ஆன்மா
சகலவிடயங்களையும் அனுபவிக்கும் அவதர
த்தில் கல்லெறிதல் முதலானவைகளாலே
னும், புத்திரர் முதலானவர்களின் மரணம்
கேட்பது முதலானவைகளாலேனும், திடுக்
கிடப் பிராணவாயுவும் சீவியாமல் ஒன்றை

அறிந்தும்அறியாமல்மூர்ச்சித்து மயங்கிநின்ற அவதரம் சாக்கிரத்தில்அதீதம், ஆன்மாவும் பிராணவாயுவும் சீவித்துப் பெருமூச்செறிந்து நின்ற அவதரம் சாக்கிரத்திற் றுரியம், சித்தம் பிராணவாயு இவற்றுடன் கூடித் துக்கமாத்திரமாய் நிற்பது சாக்கிரத்திற் சுழுத்தி, இருபத்து நான்குதத்துவங்களுடனே க்ஷேத்திரக்கியனுங்கூடி இருபத்தைந்தாய்த் துக்கம் இதனால் வந்ததென்னுஞ் சிந்தையுடனே துக்கத்தை அநுபவிப்பது சாக்கிரத்திற் சொப்பனம், தத்துவ தாத்துவிகமெல்லாவற்றுடனுங்கூடிச் சகல விடயங்களையும் அநுபவிப்பது சாக்கிரத்திற் சாக்கிரம், இதுவே சகலாவத்தை எனவறிக. (உச)

நிருவிகற்பமாகிய சுத்தாவத்தையை அடைந்து சஞ்சரிக்கும் சீவன் முத்தனுக்குப் பிரவிருத்தி நிவிர்த்தியாதி பரம்பரையாக உபாதியோடு கூடியிருக்கிற சரீராதிகளுக்குப் பின்னமாய் முன்சொன்ன கேவலசகலாவத்தைகளையும்நீங்கிச் சுத்தாவத்தையில் அசைவற நின்றபோது, சொச்சொரூபம் விளங்குமென்று அருளிச்செய்கின்றார்:—

உடம்பி ரண்டு முயிர்ப்புட னுள்ளமும்
மடம்ப டும்மகங் காரமும் புந்தியும்

திடம்படத்தன்னில்வேறெனச்சிந்திப்பான்
உடம்பிலா ஞான வுள்ளொளி யுள்ளுறும்.

(இ-ள்.) உடம்பு இரண்டு—தூலசரீரமும் சூக்குமசரீரமும்,

உயிர்ப்புடன் உள்ளமும் — பிராணவாயுவும் சித்தமும்,

மடம் படும் புந்தியும் அகங்காரமும்—விடய நிச்சய சொரூபமாய்ப் போக்கிய ரூபமான புத்தியும் புத்தியைக் கிரகிக்க வேண்டுமென்பதிற் கருவியாகிய யானெனதென்னும் அகங்காரமும்,

திடம்படத் தன்னில் வேறு எனச் சிந்திப்பான் உடம்பு இலா ஞான உள் ஒளி உள் உறும்—இங்ஙனம் சொல்லப்பட்ட தத்துவங்களையெல்லாம் திடமாகத் தனக் கந்நியமாக யாவனொருவன் சிந்தித்து நீங்குகிறானோ அவனுக்குத் தேகாதி சர்வோபாதிரகிதமாயிருக்கிற சொச்சொரூப ஞானம் விளங்கும் எ-று. (உரு)

தத்துவங்களுக்குப் பின்னாய்ப் பிரகாசனுமாய் விழிக்கப்பட்டுச் சுத்தமாய்ச் சித்துரூபனாய்த் திரோதானமாகிய நித்திராவத்தையும், உணர்த்து முறைமையதாகிய சாக்

கிராவத்தையு முதலிய உபாதிகளோடுங்கூடிய கேவல சகல நீங்கி, சுத்தாவத்தையில் நிற்கும் ஞான சாதகனுக்கே ஞானஞ் சித்தியாமென்று அருளிச்செய்கின்றார்:—

௯௨ வேறு.

திருந்தகு சமாதியைச் செய்யுங் காலத்துக், கருத்தெழுந் தடங்காது கலங்கு மாயினும், வருந்தமா நித்திரை மருவு மாயினும், திரித்தறி வுறுத்துத்தன் னிலையிற் சேர்க்கவே.

(இ-ள்.) திருந்தகு சமாதியைச் செய்யும் காலத்து—சிறப்பினையுடைய சிவாநந்தியமாயிருக்கும் சமாதியை அநுசந்தானம் பண்ணிக்கொண்டிருக்கும்போது,

கருத்து எழுந்து அடங்காது கலங்கும் ஆயினும்—பூர்வ வாசனையினாலே கலை முதலான தத்துவங்களுடனேகூடி மனமானது அடங்காமற் கலங்கினாலும்,

வருத்தம் ஆ நித்திரை மருவும் ஆயினும்—சரீர வருத்தங்களினாலே அதீததாவத்தை வந்து பொருந்துமாயினும்,

திரித்து அறிவுறுத்துத் தன் னிலையில் சேர்க்கவே—இங்ஙனம் சொல்லப்பட்ட சாக்கி

ராதிகளில் போதஞ் செல்லாமல் பிரயாசப் பட்டாயினும் திருப்பிச் சிதாநந்த சிவாநந நிய சாட்சாத்காரமாகிய சுத்தாவத்தையில் பற்றுதலைச்செய்து சிவமாயே இருக்கக்கட வன் எ–று. (உகா)

பிரியாமல் ஒருவிடங்களிலே பற்றுதலும், தன்னிடத்திலே தான்இலயமாயிருத்தலும், சற்றே விடயங்களில் பற்றுதலும் விடுதலும் ஆகப் பலகாலுஞ் சஞ்சரித்தலும் ஆகிய வியாபாரங்களால் சங்கிலிட்டமனம், கெதாகெதிமனம், விடசித்தமனம், சொலினமனம் என நான்காம். இவற்றுள், சங்கிலிட்டமனமாவது மந்திரம், மனனம், மந்தவ்வியம் என்னும் மூன்றுவிதமும் இல்லாததாய், அநநிய சொரூபமாய், குணாதீதமாய், தன்னுலே பற்றப்பட்டு அநுபூதியா யிருப்பதாய், விடயங்களிலேபற்றாததாய், நேயத்திலே நிச்சல சொரூபமாய், சாத்துவிககுண ரூபமாயிருப்பது. கெதாகெதி மனமாவது வியாபார ஞானவஞ்ஞானசொரூபமாய், இராசதகுணசொரூபமாய், பற்றுதலும் விடுதலுமாக விடயங்களிலே சஞ்சரிப்பது. விடசித்தமனம் விடயபோக நிமித்தமாகத் திரிகால வியாகுல சொரூபமாய், தமோகுணரூபமா

யிருப்பது. சொலினமனமாவது பிரவஞ்ச த்திலும் சுத்தாவத்தையிலும் செல்லாமல் அடங்கியிருப்பது. உத்தமம், மத்திமம், அதமம், அதமாதமம் ஆகிய இந்நான்குவித மனேவியாபாரங்களுக் குள்ளே சங்கிலிட் டாவத்தா சொரூபமாயிருக்கும்மனமே சுத் தாவத்தையில் அடங்கி யிருக்கவேண்டுமெ ன இரண்டு திருவிருத்தங்களினு லருளிச் செய்கின்ருர்:—

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

ஆராத சித்தம் யாதோர் காலத்தி னடங் கு மாஞல், பேராமல் வருந்திக் காத்துப் பி ன்னைச் சிந்தனைகள் சென்று, சாராமல் வல் ல வாறு தடுத்துச் சார்வான வெல்லாம், சேராமன் மயக்க நீக்கித் திதமாகச் செய்து கொள்வான்.

(இ-ள்.) ஆராத சித்தம் யாது ஓர் காலத் தின் அடங்கும் ஆஞல் — அமைவு பெருத சித்தமானது யாதொரு காலத்தில் சுத்தா வத்தையில் லயத்தை அடைந்திருக்கும் ஆ யின்,

பேராமல் வருந்திக் காத்து — அம்மனத் தை அசையாமல் வருந்திக் காவல்செய்து,

பின்னைச் சிந்தனைகள் சென்று சாராமல் வல்ல ஆறு தடுத்து—மன நிச்சலமானபின்பு முன்னைய வாசனையினாலே மீண்டும் விடயங்களிற் சென்று சலனத்தைப் பொருந்தாமல் ஞானோபாயத்தால் தடுத்து,

சார்வு ஆன எல்லாம் சேராமல் மயக்கம் நீக்கித் திதம் ஆகச் செய்து கொள்வான்—மயக்கத்தினால் வரப்பட்ட உயிர்ச்சார்வு பொருட்சார்வுகள்எல்லாம் பொருந்தாமல் நீக்கி மனத்தை நிறுத்திக்கொள்வான் சிவாநநிய சாட்சாத்காரத்தை அடைந்திருக்கும் சீவன்முத்தன் எ-று. (உஎ)

பற்றினாற் சலிக்கு முள்ளம் பற்றாதே பண்ணிக் கொள்க, நிற்றலின் றெனினுந் தத்த நிலையினி னிறுத்திக் கொண்டால், பெற்றன மென்று பேணிப் பின்னைப் பேராமற் காக்கும், நற்றவ ரன்றி யிந்த வுலகினி னல்லோ ரியாரோ.

(இ-ள்.) பற்றினால் சலிக்கும் உள்ளம் பற்றாதே பண்ணிக்கொள்க—மனமானது விடயங்களிலே பற்றினால் சஞ்சலமாம் என்றறிந்து விடயங்களிலே பற்றாதபடி நிச்சலமாகப் பண்ணிக்கொள்க,

நிற்றல் இன்று எனினும் தம்தம் நிலையினி ல் நிறுத்திக்கொண்டால்—மன நிச்சலம் ஆ காதிருந்தாலும் ஞானோபாயத்தினாலே வி டயங்களிலே பற்றாமல் நிறுத்திக்கொண்ட போது,

பெற்றனம் என்று பேணிப் பின்னைப் பே ராமல் காக்கும் நல்தவர் அன்றி இந்த உல கினில் நல்லோர்யார் — மன நிச்சலமாகப் பெற்றோமென்று பதனமாகப் பின்னும் பூ ர்வவாசனையினால் விடயங்களிற் செல்லாம ல் காவல்செய்யும் நல்ல தவத்தோடுங் கூடி ய ஞானிகளே அல்லாமல் இந்த வுலகத்தி ல் நல்லோர்கள் யாவர். அவர்கள் தாம் உல காதீதர் எ—று. ஏ—ஈற்றசை. (உ௮)

மன நிச்சலத்தினாலே நிராலம்பமான அ ளவில் பிரகாசிக்கப்பட்ட நின்மலமாகிய சி தாகாச சொரூபமே ஆன்ம சொரூபமென் று அருளிச்செய்கின்றார்;—

கலிவிருத்தம்.

பிறந்து பெற்ற வறிவாற் பெறும் பயன்
நிறைந்த நீர்முகி னீங்கிய வானெனை
அறிந்து தன்னை யமல வியாபகம்
செறிந்து நல்ல தியானத் திருத்தலே.

(இ-ள்.) நிறைந்த நீர் முகில் நீங்கிய வான் என—நிறைந்த நீரோடுங் கூடிய மேகங்களெல்லாம் நீங்கிய ஆகாசமானது மாசில்லாமல் எப்படித் தூய்தா யிருக்குமோ அதுபோல,

அமல வியாபகம் செறிந்து தன்னை அறிந்து நல்ல தியானத்து இருத்தலே—ஆணவாதி சர்வோபாதி சூனியமாகிய சிதாகாச ரூபமாய் நின்மல வியாபகமாயிருக்கிற தன்னை அறிந்து சுத்தாவத்தையில் நிலைபெற்று நிற்பதே,

பிறந்து பெற்ற அறிவால் பெறும்பயன்—மக்களாய்ப்பிறந்து நல்லறிவைப் பெற்றதினாற் பெறும் பிரயோசனமாம் எ-று. (உகூ)

அடையோகம் இராசயோக முதலான யோகசாதகனைப்போல, மனத்தை மேலும் கீழும் நடுவும் பக்கங்களிலும் செலுத்தாமல் நிராலம்பன மாகவே பண்ணவேண்டுமென்று அருளிச் செய்கின்றார்:—

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

வெளியென மறுகுஞ் சித்த நெஞ்சிலே மருவி நிற்கும், தெளிவுற நடுவு கீழ்மேற் செலாவகை நிறுத்திக் கொண்டால், ஒளி

யுறு முள்ள மொன்றும் பாவியா துறவே நோக்கி, எளியவப் பொருண்மேல் பற்றற் றிருப்பவன் யோகி யாவான்.

(இ-ள்.) வளிஎன மறுகும் சித்தம் நெஞ்சிலே மருவிநிற்கும்—வாயுவைப்போல அசையும் சித்தம் நெஞ்சத்திலே பொருந்தி நிற்கும்,

தெளிவு உற நடுவு கீழ்மேல் செலாவகை நிறுத்திக்கொண்டால்—தெளிவைப் பொருந்த இருதயம் மூலாதாரம் பிரமரந்திரம் இந்தத் தானங்களிலே பாவிக்கப்பட்ட பாவனைகளிற் செல்லாமல் மனத்துக்குப் பற்றுதலும் சித்தத்துக்குச் சிந்தித்தலும் இல்லாமல் நிச்சலம் பண்ணினால்,

ஒளி உறும் உள்ளம் ஒன்றும் பாவியாது உறவேநோக்கி—சித்து ரூபமாகிய ஆன்மா ஒருபாவனையும் இல்லாமற் சொரூப பாவனையே பண்ணிக்கொண்டு,

எளிய அப் பொருள்மேல்பற்று அற்று இருப்பவன் யோகி ஆவான்—எளிமையாயுள்ள தேகாதி பிரவஞ்சத்திற் பற்றுதலில்லாமற் சிவோகம் பாவனை பண்ணிக்கொண்டிருக்கிறவனே சிவயோகி யாவான் எ-று. ()

கேவல சகலங்களை நீங்கிச் சுத்தாவத்தை யில் நிலைபெற்று நிற்பதே முத்தி நெறியென்று அருளிச்செய்கின்றார்:—

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

நித்திரையும் பராக்கினையு நீக்கிச் சித்த மொருநிலையு நீங்காம னிறுத்திக் கொண்டால், சித்தமொரு பொருளினையுஞ் சேராதாகிச் சேரும்வகை சேராமற் செல்ல நின்று, மத்தமன முதலான வவத்தை யொன்று மருவாத வகைநிற்கு மதுவே யாகும், முத்திநெறி யென்றுமறை யிடைவி டாது முறையிடவு மாகமங்கண் மொழியுங் காணே.

(இ—ள்.) சித்தம் ஒரு நிலையும் நீங்காமல் நித்திரையும் பராக்கினையும் நீக்கி நிறுத்திக்கொண்டால்—சித்தத்தை ஒரு விடயங்களிலேயும் செல்லாமல் கேவல சகல நீக்கித் தராசு நிலைபோலச் சுத்தாவத்தையில் நிறுத்திக்கொண்டால்,

சித்தம் ஒரு பொருளினையும் சேராதாகி—அவ்விடத்துப் பூர்வ வாசனையால் மனத்துக்குப் பற்றுதற்ருழிலும் சித்தத்துக்கிருப்பிடமாகிய சிந்தித்தற்ருழிலும் பொருந்தாமல்,

சேரும் வகை சேராமல் செல்லநின்று—பொருந்தப் பட்ட விடயங்க ளொன்றும் பொருந்தாமல் நீங்கி நின்று,

மத்த மனம் முதல் ஆன அவத்தை ஒன்றும் மருவாத வகை நிற்கும் அதுவே ஆகும்—விடயங்களிற் செல்லாநின்ற மன முதலான தத்துவ முப்பத்தாறுடனும் தாத்துவிகங்களுடனும் கூடிநிற்கிற சகலாவத்தையும் கேவலாவத்தையும் இவைகளொன்றும் பொருந்ாதபடி சச்சிதாநந்த சிவாநந்நிய சாட்சாத்காரமா யிருக்கும் அதுவே சுத்தாவத்தையில் நிற்பதாகும்,

முத்தி நெறி என்று மறை இடைவிடாது முறையிடவும் ஆகமங்கள் மொழியும் காண்—பஞ்சபாச பந்தநிவர்த்திக்கும் இதுவே வழியென்று வேதாகமங்கள் இடைவிடாமற்சொல்லும்; அதனைக் காண்பாயாக எ-று.

"சுத்தாவத்தை" என்பது நின்மலாவத்தை யென்றறிக. நின்மலாவத்தை யாவது சிவசொரூபமாகிய ஞானாசாரியனாலே இந்திரிய வியாத்தியுடன்கூடி நம்மில் அநந்நியமான உனது சொரூபத்தை யறிந்தாயில்லை. நாமே நீயென்று போதிக்கப்பட்டவன் தான் சிவனைக்காட்டிலும் அநந்நியனென்று சி

ந்திித்தல் தெளிதலைச்செய்து, ஆணவாதி பஞ்சபாசங்களை நீங்கி, சச்சிதாநந்த சொரூபமாகிய சிவத்தையே அநந்நியமாகச் சாட்சாத்கரித்து, அதிலே அழுந்தி, அதுவே யாய், காச மற்றகண் சூரியப்பிரகாசத்துடனே கலந்து பின்னையொன்றுங்காணாததுபோல, பசுகரணம் சிவகரணமா யிருக்கை, அது நின்மலசாக்கிரம் நின்மலசொப்பனம் நின்மலசுழுத்தி நின்மலதுரியம் நின்மலதுரியாதீதம் என ஐந்தாம், அவற்றுள் நின்மல சாக்கிரமாவது நின்மல சாக்கிராவத்தைக்குத் தானமாகிய இருதயத்தில் சிவசத்தியுடனே கூடுதலால் உப்பளத்திலே விழுந்தது உப்பாமாறுபோல, சிவபூதமாய் அகார உகார மகார விந்துநாதங்கள், கிரியாசத்தி ஞானசத்தி இச்சாசத்தி ஆதிசத்தி பராசத்திகளுடனும், மனம் புத்தி அகங்காரம் சித்தம் உள்ளமென்னும் ஐந்துடனுங்கூடி, பாகிந்திரியங்களாற் காணப்பட்ட சத்தாதிவிடயங்களைச் சிவாகாரமாகவும், விடயசுகங்களைச் சிவாநந்தமாகவும் அநுபவிப்பது; நின்மல சொப்பனமாவது சாக்கிராவத்தைக்குக் காரணமாகிய அகாரம் உகாரத்திலும், புறத்தில் விடயங்களைப் பற்றுமனம் அகங்காரத்திலும், கிரியாசத்தி ஞானசத்தியிலும் ஒடுங்க, அக

ராதி நான்குடனும், அதைப் பிரேரிப்பதாகிய உகாராதிநான்குடனும், அதற்குப் பிராணாகிய ஞானசத்திமுதல் நான்குடனுங்கூடி, சொப்பனாவத்தைத் தானமாகிய கண்டத்தானத்திலே அந்தக்கரண விருத்தியுடன் சிவோகம் பாவனைபண்ணி நிற்பது. நின்மல சுழுத்தியாவது சொப்பனாவத்தைக்குக் காரணமாகிய உகாரம் மகாரத்திலும், நானென்று திரிகிற அகங்காரம் புத்தியிலும், ஞானசத்தி இச்சாசத்தியிலும் ஒடுங்க, புத்திமுதலான மூன்றும், அதைப் பிரேரிக்கும் மகராதி மூன்றும், அதற்குப் பிராணாகிய இச்சாசத்தி முதல் மூன்றுடனுங்கூடி, சுழுத்தித் தானமாகியதாலு மூலத்திலே தேகேந்திரிய வியாபார மற்று வாசாமகோசரமாய் ஞாதுரு ஞான நேய மென்னு மூன்றாகச் சுகத்தை அநுபவித்து நிற்பது. நின்மல துரியமாவது சுழுத்தியவத்தைக்குக் காரணமாகிய மகாரம் விந்துவிலும், பகுத்தறியும் புத்தி சித்தத்திலும், இதற்குப் பிராணாகிய இச்சாசத்தி ஆதிசத்தியிலும் ஒடுங்க, சித்தமுதலாகிய இரண்டும் அவைகளைப் பிரேரிப்பதாகிய விந்து நாதங்களுடனும், அதற்குப் பிராணாகிய ஆதிசத்தி பராசத்தியுடனுங்கூடி, துரியாவத்தைக்குத் தானமாகிய

புருவமத்தியத்திலே தேகேந்திரிய அந்தக்
கரணங்களின் வியாபாரம் ஒன்றுமில்லாம
ல், கேவலம் ஞானமாத்திரமா யிருப்பது;
நின்மல துரியாதீதமாவது துரியாதீதாவத்
தைக்குக் காரணமாகிய அநாகத நாதமென்
னும் பராசத்தியும், சிவாநந்தாநுபவியாகிய
ஆன்மசொரூப ஞானமாகிய உள்ளமும், நி
ன்மலா தீதாவத்தைக்குத் தானமாகிய பிர
மரந்திரத்திலே அகண்டாகார சச்சிதாநந்
தாத்துவித பரிபூரண சிவாநந்தானுபோகத்
தை இரண்டறப் பெற்றிருப்பது; இந்தத்
துரியாதீதாவத்தை உன்மனைக்கு மேற்பட்
டிருக்கிற பரமமோட்சம். இதைப்பெறவே
நிவிர்த்திமுதலான பஞ்சகலைகளும் அன்ன
மயமுதலான பஞ்சகோசங்களும், நகாராதி
தூல பஞ்சாக்கரமும், அகாராதி சூக்குமப
ஞ்சாக்கரமும், சத்தியோ சாதாதி பஞ்சம
ந்திரங்களும், பிர்மாமுதலான பஞ்சகர்த்த
ர்களும், சுத்தவித்தைமுதலான பஞ்சதத்து
வங்களும், மன முதலாக உள்ளத்துடனே
அந்தக்கரணங்கள் ஐந்தும், வைகரி முதலா
ன வாக்குகள் ஐந்தும், கிரியாசத்தி முதலா
ன பஞ்ச சத்திகளும், ஆணவாதி பஞ்சபா
சங்களும், சர்வோபாதிகளும் நீங்கும். இங்
ஙனம், நின்மலதுரியாதீதாவத்தையை ஒரு

பசு கறக்கிற நேரமாத்திரமாயினும், வில்வி
ற்கழன்ற அம்பு பூமியிலே விழுமளவாயினு
ம், கண் ணிமைக்குமளவாயினும் பெற்றவ
ன் மீண்டும் பிறவான் என்று அறிக. (௩௧)

மனோவியாபாரமும் இல்லை, மனத்தான்
அறியப்படும் பொருளும் இல்லை, அறிவானு
ம் இல்லை, தன்னிடத்திலேதானே தானிருந்
து விடயங்களை எல்லாம் விட்டு நீங்கினவனா
ய், சிவசாட்சாத்காரமா யிருப்பவனுக்குச் சு
ழுத்தியவத்தையில் தத்துவங்கள் எல்லாம்
ஒழிந்துநிற்கும் நிலைபோல நிற்கும் என்று
சிவாகமங்களிலே அருளிச்செய்திருக்கையா
ல், குணாதீதசொரூபமாய்ச் சொலினமாகிய
தன்னிடத்திலே அடங்கியதாகிய அந்தச்
சுத்தாவத்தையை மோட்சசொரூப சாதன
மென்று அநுசந்தானம் பண்ணிக்கொண்டி
ருக்கிறவன் மீண்டும் பிறவாமல் சிவசாயுச்
சியத்தை அடைவனென்று அருளிச்செய்கி
ன்றார்:—

பொருண்முழுது மடையாமன் மனத்தை
வாங்கி நெஞ்சகத்தே பொருந்துவித்த பொ
ழுது தோன்றும், இருளறுநன் ஞானவொ
ளி யதுவி ளங்க வெப்பொழுதும் வாதனை
யே யியற்றிக் கொள்க, பரமதுவா யிலதாகி

யங்க மின்றிப் பற்றின்றி யவத்தையின்றி நி
ன்ற வொன்றை, உரனுடைய தியானிகளா
யுறைகின் றாரோ பிறப்பிலா வந்நிலத்தை யு
றுகின் றாரோ.

(இ-ள்.) மனத்தை பொருள் முழுதும் அ
டையாமல் வாங்கி நெஞ்சகத்தே பொருந்
து வித்த பொழுது—மனத்தை இருவகை
மாயையின்கண்ணுள்ள சர்வ விடயங்களிலு
ம் பற்றாமல் தம்மிடத்திலே அடங்கும்படி
நிச்சலமாகப் பண்ணினபொழுது,

தோன்றும் இருள் அறும் நல்ஞான ஒளி
யது விளங்க எப்பொழுதும் வாதனையே இ
யற்றிக் கொள்க—மன நிச்சலத்துக்கு மேற்
பிரகாசிக்கப்பட்ட நின்மலமாகிய சொரூப
ஞானம் இடைவிடாமல் விளங்கும்படி ஞா
னோபாயத்தை எப்பொழுதும் பண்ணக்கட
வர்,

பரமது ஆய் இலது ஆகி அங்கம் இன்றி
பற்று இன்றி அவத்தை இன்றி நின்ற ஒன்
றை உரன் உடைய தியானிகள் ஆய் உறை
கின் றாரோ பிறப்பு இலா அந்நிலத்தை உறு
கின் றார்—அங்ஙனம், உன்மனாநந்தமாய் நி
ருபாதியாய் நிராகாரமாய் நிராலம்பமாய்
ஓர் அவத்தைகளும் இல்லாததாய் நிற்கின்ற

சச்சிதாநந்த பரிபூரண சிவாநுபூதிய சாட்சாத்காரமாய் விளங்கும் சுத்தாவத்தையை அநவரதமும் அநுசந்தானம் பண்ணிக்கொண்டிருக்கிற சீவன்முத்தர்களே பிறப்பற்ற சிவ சாயுச்சியத்தை அடைகின்றவர் ஆவர். எ-று. ஏ - அசை. (கூஉ)

சுகதுக்க ஏதுவாயிருக்கிற விருப்பு வெறுப்புகளும், தேவதாவுபாசனையும், புண்ணிய பாவங்களும், கன்மபலங்களும், பதப்பிராப்திகளும், இவைகள் உண்டாவதற்குக் காரணமாகிய உயிர்ச்சார்வு பொருட்சார்வுகளும், நீங்கிய தபோதனர்களிடத்துச் சிவமிரண்டற விளங்குமென்று அருளிச்செய்கின்றார்:—

துக்கசுக மாசைவெறுப் பென்று கூடுந்
துவந்துவங்க ளிரண்டவைபோற் சொல்லப் பட்ட, மிக்கதெய்வ மடவார்க டன்மா தன்ம மெய்ப்பலன்கள் பெறுவபே றுளவாமென்று, தொக்கவுள மதுவாகும் பிறப்பை யாக்குந் தொடர்பெனவே துணிந் தந்தத் தொடர்பை யாக்கும், தக்கபொருட் சார்வுயிர்ச்சார் வடைய நீக்குந் தவத்தோர்பாற் சிவம்வந்து சாருங் காணே.

(இ-ள்.) சுகம் துக்கம் ஆசை வெறுப்பு என்று கூடும் துவந்துவங்கள் இரண்டு—சுகதுக்க ரூபமாகிய பிறவிக்கு ஏதுவென்று சொல்லப்பட்ட விருப்பு வெறுப்புகள் ஆகிய தொடர்ச்சிகள் இரண்டும்,

அவைபோல் சொல்லப்பட்ட மிக்க தெய்வம் மடவார்கள் தன்மா தன்மம் மெய்ப்பலன்கள் பெறுவ பேறு உளது ஆம் என்று—முன் சொல்லப்பட்டவைபோல, பிறவிக்கேதுவாகிய பிர்மாமுதலான தேவதோபாசனைகளும், அவர்களுடைய சத்திகளின் சம்பத்தும், இவற்றால் வரும் புண்ணிய பாவங்களும், சித்திகளும் பந்தப்பேறுகளும் உண்டாம் என்று,

தொக்க உளமது. ஆகும் பிறப்பை ஆக்கும் தொடர்பு எனவே துணிந்து—இங்ஙனம் சொல்லப்பட்ட இவைகளிற் பொருந்திய உள்ள மானது அததற் கேற்ற பிறப்பை உண்டாக்குந் தொடர்ச்சியென் றறிந்து,

அந்தத் தொடர்பை ஆக்கும் தக்க பொருட்சார்வு உயிர்ச் சார்வு அடைய நீக்கும் தவத்தோர்பால் சிவம் வந்து சாரும் காண்—அத் தொடர்ச்சியை உண்டாக்கத் தக்க பொன் மணி முதலிய பொருட்சார்வுகளையு

ம், மாதா பிதா மனைவி மக்கள் முதலிய உயிர்ச்சார்வுகளையும், முழுதும் நீக்கிய தபோதனர்களிடத்திலே சிவம் இரண்டற விளங்கும் நீ அறிந்துகொள்வாயாக எ-று. ஏ- அசை. (௩௩)

சிவத்தை இரண்டறப் பெற்றிருக்கும் சீவன் முத்தர்கள் வைராக்கியத்தால் தேகம் விடவொண்ணா தென்று அருளிச்செய்கின்றார்:—

உடம்புடனே யுபாயத்தால் விளங்கித்
தோன்று முள்ளொளியாம் பரசிவம்வந் து
ற்றபோதே, திடம்படவே சீவன்முத்த னா
கும் விட்டாற் செல்லுமவன் பரமுத்தி தன்
னைச்சேர, விடம்படுமெஞ் ஞானியுடல் வே
ண்டா வென்றே யிப்பொழுதே வலியவிட
வெண்ண வேண்டா, கடன்கொள்வினை த
ன்னளவு நின்றேயந்தக் காயமுமங் கதன்பி
ன்னே கழியுங் காணே.

(இ-ள்.) உடம்புடனே—இந்தச் சரீரத் திருக்கையிலே தானே

உபாயத்தால் விளங்கித் தோன்றும் உள் ஒளி ஆம் பரசிவம் வந்து உற்ற போதே— மன நிச்சல உபாயத்தால் பிரகாசித்துத்

தோன்றுகின்ற உள்ளொளியாகிய சிவாநந்திய சாட்சாத்காரம் விளங்கின போதே,

திடம் படவே சீவன் முத்தன் ஆகும்—திடமாகச் சீவன் முத்தனவன்,

விட்டால் அவன் பரமுத்தி தன்னைச் செல்லும்—பிராரத்த சரீரம் நீங்கினால் அவன் பரமுத்தியைச் சென்றடைவன்.

சேர விடம்படும் மெய்ஞ்ஞானி உடல் வேண்டா என்றே இப்பொழுதே வலியவிட எண்ணவேண்டா — சர்வ பிரவஞ்சமும் விடம்போலத் தோன்றப்பட்ட சீவன் முத்தனவன் சரீரம் வேண்டாவென்று இப்பொழுதே வலியவிட நினைக்கவேண்டுவதில்லை,

கடன் கொள்வினை தன் அளவு நின்றே அந்தக்காயமும் அதன் பின்னே கழியுங்காண்—எடுத்த உடலுக் கடுத்த பிராரத்தம் உள்ளமட்டும் இருந்து அந்தச் சரீரமும் பிராரத்தந் தொலைந்தபின்னர் நீங்காநிற்கும், நீபார்ப்பாயாக எ—று. ஏ-ஈற்றசை. (௩௪)

இங்ஙனஞ் சொல்லியபடி சீவன் முத்தித் தன்மையும், தேகாந் தத்திலே பரமுத்தித் தன்மையும், பரமுத்திக்கேதுவாகிய உபாயமுங் கூறி, சிவ தீட்சையினாலே அவ்வியத்

தமாயிருக்கும் சிவ தத்துவத்தோடு கூடிய
சீவன் முத்தனுடைய சைதன்னியமானது
தேகநீங்கிப் பரமுத்தியாமளவும் இருக்குந்
தன்மையை அருளிச் செய்கின்றார்:—

ஆகத்தே யாங்கார வடிவ தாகி யருவினை
செய் தகங்கார மாகு மாய, மோகத்தைத்
துறக்கின்மொழி யிற்ப டாத முத்திதல மினி
தளிக்கு மொழிந்த தன்றிச், சோகத்தைத்
தருமுடலை யெல்லாம் விட்டுச் சோராத வ
றிவாகிச் சுத்த ரூபம், ஆகத்தான் பாவித்தா
ற் சத்தி யெல்லா மறவிடுகை பரமார்த்த ம
றிவார் தாமே.

(இ-ள்.) ஆகத்தே ஆங்கார வடிவது ஆகி
அருவினை செய்து அகங்காரம் ஆகும் மாய
மோகத்தைத் துறக்கின்—இருதய கமலத்தி
லே நானென்கிற அகங்காரத்துடனே கூடி,
அதனால் அழுக்கடைந்து அந்தக் கரணத் த
லைவுடன் கூடிக் கன்மங்களைச்செய்து, நான்
சுகி நான் துக்கி நான் கர்த்தா நான் போகி
யென்று இங்ஙனம் அநேக விதமாக அகங்க
ரிக்கும் அகங்கார சொரூப மாய்ப் பொய்யா
யிருக்கிற மயக்கமாகிய அறிவை நீங்கினால்,
மொழியில் படாத முத்தி தலம் இனிது
அளிக்கும்—வாக்கிறந்த மோட்ச வீட்டை
இனிதாகக் கொடுக்கும்,

மொழிந்தது அன்றி—இங்ஙனஞ் சொல்லப்பட்ட உடற் பற்றல்லாமல்,

சோகத்தைத் தரும் உடலை எல்லாம்விட்டு—துக்க ஏதுவா இருக்கிற சரீரத்தையும் ஆணவாதி பஞ்ச பாசங்களையு நீங்கி,

பரமார்த்தம் அறிவார்—பரமார்த்தம் உணர்ந்த சீவன்முத்தர்கள்,

சோராத அறிவாகி சுத்தரூபம் ஆகத்தான் பாவித்துச் சத்தி எல்லாம் அறவிடுக—நின்மலமாய் நித்தியமாயிருக்கிற சிவாநந்திய சாட்சாத்காரத்தைப் பொருந்திச் சிவோகம் பாவனைபண்ணிப் பிராரத்த கன்மத்தால் உண்டாகும் போகத்திற் பற்றற்றிருக்கக்கடவர் எ—று. தாம்—ஏ—அசை. (௩௫)

வர்ணாச்சிரம தருமங்களை எல்லாம் விட்டுச் சொச் சொரூபத்தை அறிந்தவர் அப்பாவனையே பண்ணக்கடவர் என்று அருளிச்செய்கின்றார்:—

கலிவிருத்தம்.

வைய மாச்சிர மம்மென வைத்தவும்
செய்ய சாதி குலமெனச் சேர்த்தவும்
ஐய மின்றி யறவிட் டறிந்தவர்
செய்ய ஞானத் திரளைச் சிந்திக்கவே.

(இ-ள்.) வையம் செய்ய சாதிகுலம் என ச் சேர்த்தவும் ஆச்சிரமம் என வைத்தவும் ஐயம் இன்றி அறவிட்டு அறிந்தவர்—உலக இயற்கைகளையும், பிராமணன் க்ஷத்திரியன் வைசியன் சூத்திரன் அநுலோமன் பிரதிலோமன் அந்நியசாதி என்னும் சாதிபேதங்களையும், பிரமசரியம் கிருகத்தம் வானப்பிரத்தம் சந்நியாசம் என்னும் ஆச்சிரமங்களையும், சந்தேகம் இல்லாமற் பற்றறவிட்டு நீங்கிச் சொச்சொரூபத்தை அறிந்தவர்,

செய்ய ஞானத் திரளைச் சிந்திக்க — நின்மலஞான சொரூபமாயிருக்கிற சொச்சொரூபபாவனையே பண்ணக்கடவர் எ-று. வ-ஈற்றசை. (௩௬)

இந்தச்சீவன் முத்தர் ஒன்றினாலும் வசீகரிக்கப்படாமலிருக்கிற பரமசுதந்தரத்தை இரண்டு திருவிருத்தத்தினால் அருளிச்செய்கின்றார்:—

ஷ வேறு.

கடைபடு முலகிய றன்னைக் காண்குறில்
உடையவ ரெனையிலை யானுடை யாரிலை
அடையவு மெனக்கிலை யானு மன்னதே
நடையிது நிலையெனிற் றமிய ரானரோ.

(இ-ள்.) கடைபடும் உலகியல் தன்னைக் காண்குறில் — சிறுமையாகிய உலகஇயற்கையைக் காணுமிடத்து,

எனை உடையவர் இலை—சிவபெருமானுக்கு நான் பூசகனுமாய் வேதகனுமாய்க் காணேன், எனக்குக் கர்த்தாவாகவும் வேறொருவர் இல்லை,

யான் உடையார் இலை — எனக்குச் சிவபெருமான் பூசிக்கப் பட்டவருமாய்த் தியானிக்கப்பட்டவருமாய் நான்காணேன், என்னை அடிமையாக உடையவர்களும் இல்லை,

எனக்கு அடையவும் இலை — எனக்குச் சென்றடையும் பொருளும் இல்லை,

யானும் அன்னதே—என்னைவந் தடையும்பொருளும் இல்லை,

நடை இது நிலை எனில் நான் தமியன்— இங்ஙனம் கூறியவிதங்கள் எல்லாம் பரமார்த்தம் அல்லாமையால், பரமார்த்தமாக விசாரிக்கில் சச்சிதாநந்த சிவாநநிய சாட்சாத்காரமா யிருக்கும் நான் ஒருவனுமே உளன் எ-று. அரோ-அசை. (௩எ)

**சொச்ச - க் சலிப்பா.**

நித்தனும் பரமேசன் யானென்று நிச்சயிக்கின், முத்தனல னெனினுமவன் முத்தனே

முயிருடம்பின், பெத்தமற ஞானத்தாற் கா
ட்சிபெறிற் சாந்தியுடைச், சித்தனாய்ப் பொ
ருட்பற்றுத் தீர்ந்துவீ டடையுமால்.

(இ-ள்.) நித்தன் ஆம் பரமேசன் யான்
என்று நிச்சயிக்கின் அவன் முத்தன் அலன்
எனினும் முத்தன் ஆம் — நித்தனாய்ச் சர்
வகர்த்தாவா யிருக்கிற பரமசிவன் நானே
என்று யாவன் ஒருவன் நிச்சயம் பண்ணி
னன் அவன் சமாதி கூடாதிருந்தாலும் சீவ
ன் முத்தனாவன்,

உயிர் உடம்பில் பெத்தம் அற ஞானத்தா
ல் காட்சி பெறின் சாந்தி உடைச் சித்தன்
ஆய் பொருள் பற்றுத் தீர்ந்து வீடு அடை
யும்—சரீரமுதலான சர்வபந்தங்களும்நீங்க,
ஞானக் கண்ணினால் சச்சிதாநந்த சிவா நந
நிய சாட்சாத்காரமா யிருக்கும் சிவானுபூதி
யைக் கண்டபொழுது, சாந்தமாகிய மன நி
ச்சலத்தை உடையவனாய், சர்வ பதார்த்த
ங்களிலும் பற்றற்று, சிவசாயுச்சியத்தை அ
டைவன் எ-று. ஆல்-அசை. (௩௮)

சித்துக்கு அபின்னமாகச் சிற்சொரூப சி
வாநநியமாயிருக்கிற சிவோகம்பாவனாரூப
யோகத்தை நிச்சயித்தவனே சீவன் முத்த
னென்று அருளிச்செய்கின்றார்:—

எல்லையிலா நூல்களெலாம் பிறப்பிலியே
யீசனெனச், சொல்லுகின்ற வத்தாநான்
சொலப்படுமக் குணந்தொடரும், அல்லிலா
வான்மாவா யறிவளவை யளக்கின்ற, தெல்
லையிலா தெனினுநானி தில்லையமில்லை யறிநீ.

(இ—ள்.) எல்லை இலா நூல்கள் எலாம் பி
றப்பு இலியே ஈசன் எனச் சொல்லுகின்ற
வத்து நான் — அளவுபடாத வேதாகமமுத
லான நூல்கள் எல்லாம் சரீரம் இல்லாதவ
ன் என்றும் பிறப்பு இல்லாதவன் என்றும்
சர்வ கர்த்தா என்றுஞ் சொல்லப்பட்ட பர
மசிவனும் நானே,

சொலப்படும் அக்குணம் தொடரும் அ
ல்லல் இலா ஆன்மா ஆய் அறிவு அளவை
அளக்கின்றது எல்லை இலாது எனினும் நா
ன்—சொல்லப்பட்ட அக்குணத் தொடர்ச்
சியினாலே வரும் துக்கம் இல்லாத ஆத்மா
வாய். பரமாத்ம சொரூபமாய், சர்வஞ்ஞத்
துவ முடையதாய், சர்வபரிபூரணமா யிரு
ப்பதாயினும் அப்பர மான்மாவும் நானே,

இதில் ஐயம் இலை நீ அறி — இங்ஙனஞ்
சொல்லியதிற் சந்தேகம் இல்லை, நீ அறிவா
யாக எ—று. (௩௧)

நிருவிகற்ப சொரூப மாய்ச் சிவாநந்திய யோக நிட்டா பரனாயிருக்கிற சீவன் முத்தனானவன் தன்மா தன்மாதி மலினவாசனையி னின்றுந் திரும்பப் பட்டிருக்கிற சித்த புத்தியாதி கரணங்களினால் பிராரத்த வாசனை மாத்திரம் பிரவிர்த்திக்கப் பட்டு, சித்துருப பிரகாசத்தினாலே பரிபூரண பரம சுதந்தர சொரூபமாயிருக்கும் பரமசிவைக்கிய அநுசந்தான சொரூபியா யிருப்பனென்று ஒன்பது திருவிருத்தத்தினால் அருளிச் செய்கின்றார்:—

அறிவாகிச் சுத்தனா யறிவானாய் வேறாகிக், குறியாது கொளல்வீடு கூடாது கூறுங்கால், அறிவார்தா மிலராகிச் சோகாதி யடையானாய்ப், பிறியாத பரப்பிரம மெனநிற்பன் பெண்ணணங்கே.

(இ-ள்.) பெண் அணங்கே—பெண்களிற் சிறந்த கற்பாகிய அழகையுடையாளே,

கூறுங்கால் அறிவுஆகிச் சுத்தன் ஆய் அறிவான் ஆய் வேறுஆகி குறியாது வீடுகொளல்கூடாது—சொல்லுமிடத்துச் சித்துருபனாய், நின்மலனாய், சர்வத்தையும் அறிபவனாய், பஞ்ச பாசங்களுக்கும் வேறாய், சிவா

நநிய சாட்சாத்காரத்தை அறியாதபோது முத்தியடைதல் கூடாது, (ஆதலால்)

அறிவார் இலர் ஆகிச் சோகாதி அடையான் ஆய்ப் பிறியாத பரப்பிரமம் எனநிற்பன்—சீவன்முத்தன், சர்வாதீதனாய் ஸ்வஸம்வேத்தியம் ஆகையினாலே அறிவானும் அறியப்படும் பொருளும் இல்லையாய், ஞாதுரு ஞானஞேயம் என்கிற சங்கற்ப ஞானங்களும் இல்லையாய், சமரசமாய்ப் பிறிவற்றிருக்கிற பரப்பிரம சொரூபந் தானாயிருப்பன் எ—று. (௪0)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

நீடிய தலைகா லெங்கு நிரைமயிர்த் தோலி னாலே, மூடிய வுடலுங் காணுங் கனவெனு முளத்தனாகிக், கூடிய விதனின்ஞானக் குறியுடைத் துயிரோ வென்றும், கேடிலா தென்றுநோக்கிற் கேடிலா ஞானமாகும்.

(இ—ள்.) நீடிய தலைகால் எங்கும் நிரைமயிர்த் தோலினாலே மூடிய உடலம் காணும் கனவு எனும் உளத்தன் ஆகி — நிலைபெற்ற தலைமுதல் பாதமளவாக எவ்விடமும் சீலைகொண்டு மூடினாற் போல நிறைந்த மயிர்த் தோலால் மூடப்பட்ட சரீரம் கனவுபோலப் பொய்யென்று அறிந்தவனாய்,

கூடிய இதனில் ஞானக்குறி உடைத்து உயிரைஎன்றும் கேடு இலாதுஎன்றும் நோக்கின் கேடு இலாஞானம் ஆகும்—இவ்வாறு பொருந்தப்பட்ட சரீரத்தில் நிற்கும் தன்னுடைய சொரூபம் நித்தியமென்றும் சித்துரூபமென்றும் ஞானக் கண்ணினாலே பார்க்கின் பரமாயிருக்கிற ஞானசொரூபமேயாவன் எ-று. (சுக)

கொச்சகக்கலிப்பா.

நிற்பனவு நடப்பனவு மாயியங்கு நீடுயிர்கட், கொப்புடைய தாய்தந்தை யீசனுமாயுள்ளேனான், கைப்படவு முத்தியினிற் காமராய்த் துரியத்தே, நிற்பவர்க ளருச்சனையாலென்னையே நினைவரால்.

(இ-ள்.) நிற்பனவும் நடப்பனவும் ஆய் இயங்கும் நீடு உயிர்கட்கு — சராசரங்களாய் நிலைபெற்றிருக்கும் உயிர்களுக்கு,

ஒப்பு உடைய தாய் தந்தை ஈசனும் ஆய் உள்ளேன் நான்—பொருந்திய மாதாவும் பிதாவுங் கர்த்தாவுமாகி நான் இருக்கின்றேன் ஆதலால்,

கைப்படவு முத்தியினில் காமர் ஆய்த் துரியத்தே நிற்பவர்கள் அருச்சனையால் என்னையே நினைவர்—சிவ ஐக்கியத்தைப் பொ

ருந்தவேண்டு மென்னு மோட்ச விச்சையு
டையவர்களாய் உபாதிநீங்கித் துரியாவத்
தையை அடைந்த பக்குவான்மாக்கள் பூ
சை பண்ணும் இடத்தும் என்னையே தியா
னித்துப் பூசிப்பார்கள் எ-று. ஆல்-அசை.

"ஈண்டுத் துரியம்" என்றது சாயுச்சியத்
தை.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

நான்முகன் முதலாந்தேவர் நரர்நாக ரிய
க்கர் சித்தர், எனையோ ரெச்ச மெல்லாம்
விதிகளு மென்னைப்போற்றும், ஆனபின் ன
வனேபூசைக் கருகனென் றறிந்தோரெல்லா
ம், தேனமர் குழலாய்நெஞ்சாற் சிறந்தன
வெனக்கே செய்வார்.

(இ-ள்.) தேன் அமர் குழலாய்—வண்டு
கள் விரும்பி மொய்க்கின்ற அளகத்தை உ
டையாளே,

நான் முகன் முதலாம் தேவர்—பிரமன்
முதலான தேவர்களும்,

நரர் நாகர் இயக்கர் சித்தர் எனையோர் எ
ச்சம் எல்லாம் விதிகளும்—மானிடரும் நா
கலோகத்தார்களும் இயக்கர்களும் சித்தர்க
ளும் இவர்களல்லாத மற்றவர்களும் செய்
யும் சமஸ்தகிருதுக்களும்,

என்னைப் போற்றும்—என்னையே கர்த்தாவாகப்பேணும், (ஆதலால்)

ஆனபின் அவனே பூசைக்கு அருகன் என்று அறிந்தோர் எல்லாம் நெஞ்சால் சிறந்தன எனக்கே செய்வார்—அவை முற்றுப்பெற்ற பின்னர் எல்லாப்பூசையுங் கொள்வது நாம் ஆகையால் அவரோ பூசைகொள்வதற் கருகரொன்று எல்லாவகையாலும் தங்கள் தங்கள் மனத்துக்கிட்டமான பதார்த்தங்களை நமக்கே நிவேதனம் பண்ணுவார்கள் எ—று. (உரு)

கொச்சகக்கலிப்பா.

ஆற்றரிய தவம்பலபூண் டடவியழல் கால்சயிலம், போற்றரிய புனல்வெயிலூண் டுறந்துநின்று பொறுப்பதுவும், ஏற்றவருக் குயிருடம்பு முதலாக வீவதுவும், நாற்றிசையோர் பூசையிவை நான்கொள்வே னென்றேகாண்.

(இ—ள்.) நாற்றிசையோர் ஆற்ற அரிய தவம் பலபூண்டு—நாலுதிக்கிலும் உள்ளார் செய்தற்கரிய தவங்கள் பலவற்றையும் பொருந்தி,

அடவி அழல் வெயில் சயிலம் நின்று போற்ற அரியகால் புனல் ஊண் துறந்து

பொறுப்பதுவும் — கானகத்தில் பஞ்சாக்கி னிமத்தியில் வெயிலில் நின்றும் மலைகளிலே நின்றும் பசியை நீக்குதற்குரித்தல்லாத வாயுபட்சணஞ்செய்து சலபானம் பண்ணியும் புசிப்புகளைத்துறந்தும் நிராகாரமாய்ச் சகித்திருப்பதுவும்,

ஏற்றவருக்கு உயிர் உடம்பு முதலாக ஈவதுவும் பூசை இவை நான் கொள்வேன் என்றே காண் — தம்மிடத்துவந்து கேட்டவர்களுக்குச் சரீரம் பிராணன் முதலான பொருள்களைக் கொடுப்பதுவும் ஆகிய இங்ஙனம் சொல்லப்பட்ட இவைகளை நாமேமைக்கொண்டு பலன் கொடுப்போமென்று கருதியே, நீ அறிவா யாக எ-று. (சச)

ஆனநிலை யாவுடைய பூதங்க ளனைத்துநான், ஏனையவை யாவையுள வெவையுநான் றாலநுண்மை, ஆனவியா வையுமல்லே னெனையறியி லறிவோர்க்கு, ஞான மொன்று மென்னுருவ நானேயெவ் வுயிர்க்குறவும்.

(இ-ள்.) ஆனநிலை ஆ உடைய பூதங்கள் அனைத்தும் நான் — * புவனாதிகளுக் காதார

---

* இருவகை மாயையினிடமாகத் தோன்றிய பஞ்ச பூத முதலாகச் சொல்லப்பட்ட முப்பத்தாறு தத்துவங்களு நாமே எனப் பொருள்கூறினும் அமையும்.

மாக விருக்கின்ற பூதங்களும் மற்றைச் சிவ
மீறான தத்துவங்களும் நாமே,

எனையவை யாவை உள எவையும் நான்*
— அவற்றிடமாகத் தாவர சங்கமங்களா
உள்ளவைகளும் நாமே (சர்வ வியாபியா யி
ருக்கையால் இவ்வாறுளோம் ஆயினும்,)

தூலம் நுண்மை ஆன யாவையும் அல்
லேன்—தேகான்மவாதிகள் சொல்லும் தூ
லரூபமும் இந்திரிய ஆன்மவாதிகள் சொல்
லும் சூக்கும ரூபமுமாயுள்ள யாவையும் அ
ல்லோமாய்,

ஞானம் ஒன்றும் என் உருவம் எனை அறி
யின் அறிவோர்க்கு நானே எவ்வுயிர்க்கு உ
றவும் — நின்மலபோதம் ஒன்றுமே எமது
வடிவாய் எம்மையாம் விசாரிக்கு மிடத்து
யாம் சீவன்முத்தர் கூறாயிருத்தலின் அவ்
வாறறியுஞ் சீவன்முத்தர்களுக்கு நாமே எ
லாவுயிர்க்கும் உறவாயிருக்கிறோம் என்
ம் தோன்றும் எ-று.

ஈண்டு "எனை அறியின்" என்றது எம்மை
ம் விசாரிக்குமிடத்தே யாம் சீவன்முத்

---

* இஃதன்றி மற்றைத் தத்துவத்திற் றோன்றிய தா
ங்களும் நாமே எனப் பொருள் கூறினும் அ

தர் கூறுயிருத்தலின், அறிவோர்க்கெனையறி யினெனப் பிறிதுபடக் கூறுது, இவ்வாறே தியானம் பண்ணக்கடவ னென்றது. இப்ப டிச் சலியாதான் யாவன் அவன் பிரமமாத லால் என்று கூறுப ஆகலின், சிவாத்துவி தானுபவ மாறுபாடு இன்றி நான்கனுருபி ற்கேற்கத் தோன்றும் என்னும்பயனிலை அ வாய்நிலையான் வருவிக்கப்பட்டது. இஃதி யாண்டுமொக்கும். (சரு)

இல்லாத விடமிலையா னெனக்குமல மி யாதுமிலை, எல்லாருந் தொழுமீச னெனக் கவத்தை யெவையுமிலை, வில்லாரும் புருவ த்து வேலாரும் விழியாய் கேள், நில்லாத வுலகத்தை மிகநீங்கி நிற்பே ஞன்.

(இ—ள்.) வில் ஆரும் புருவத்து வேல் ஆ ரும் விழியாய் கேள்—வில்லையொத்த புரு வத்தையும், கூரிய வேலையொத்த விழியை யும் உடையாய் கேட்பாயாக,

யான் இல்லாத இடம் இலை—சர்வ வியா பியாகையினலே நாம் இல்லாத இடம் ஒன் றும் இல்லை,

எனக்கு மலம் யாதும் இலை — எமக்கு ஒ ருமலமும் இல்லை,

மாக விருக்கின்ற பூதங்களும் மற்றைச் சிவ
மீறான தத்துவங்களும் நாமே,

எனையவை யாவை உள எவையும் நான்*
— அவற்றிடமாகத் தாவர சங்கமங்களா
உள்ளவைகளும் நாமே (சர்வ வியாபியாயி
ருக்கையால் இவ்வாறுளோம் ஆயினும்,)

தூலம் நுண்மை ஆன யாவையும் அல்
லேன்—தேகான்மவாதிகள் சொல்லும் தூ
லரூபமும் இந்திரிய ஆன்மவாதிகள் சொல்
லும் சூக்கும ரூபமுமாயுள்ள யாவையும் அ
ல்லோமாய்,

ஞானம் ஒன்றும் என் உருவம் எனை அறி
யின் அறிவோர்க்கு நானே எவ்வுயிர்க்கு உ
றவும் — நின்மலபோதம் ஒன்றுமே எமது
வடிவாய் எம்மையாம் விசாரிக்குமிடத்து
யாம் சீவன்முத்தர் கூறாயிருத்தலின் அவ்
வாறறியுஞ் சீவன்முத்தர்களுக்கு நாமே எ
ல்லாவுயிர்க்கும் உறவாயிருக்கிறோம் என்
றும் தோன்றும் எ—று.

ஈண்டு "எனை அறியின்" என்றது எம்மை
யாம் விசாரிக்குமிடத்தே யாம் சீவன்முத்

---

* இஃதன்றி மற்றைத் தத்துவத்திற் றோன்றிய தா
த்துவிகங்களும் நாமே எனப் பொருள் கூறினும் அ
மையும்.

தர் கூறுயிருத்தலின், அறிவோர்க்கெனையறி
யினெனப் பிறிதுபடக் கூறுது, இவ்வாறே
தியானம் பண்ணக்கடவ னென்றது. இப்ப
டிச் சலியாதான் யாவன் அவன் பிரமமாத
லால் என்று கூறுப ஆகலின், சிவாத்துவி
தானுபவ மாறுபாடு இன்றி நான்கனுருபி
ற்கேற்கத் தோன்றும் என்னும்பயனிலை அ
வாய்நிலையான் வருவிக்கப்பட்டது. இஃதி
யாண்டுமொக்கும். (௨௫)

இல்லாத விடமிலையா னெனக்குமல மி
யாதுமிலை, எல்லாருந் தொழுமீச னெனக்
கவத்தை யெவையுமிலை, வில்லாரும் புருவ
த்து வேலாரும் விழியாய் கேள், நில்லாத
வுலகத்தை மிகநீங்கி நிற்பே ளுன்.

(இ-ள்.) வில் ஆரும் புருவத்து வேல் ஆ
ரும் விழியாய் கேள்—வில்லையொத்த புரு
வத்தையும், கூரிய வேலையொத்த விழியை
யும் உடையாய் கேட்பாயாக,

யான் இல்லாத இடம் இலை—சர்வ வியா
பியாகையிலே நாம் இல்லாத இடம் ஒன்
றும் இல்லை,

எனக்கு மலம் யாதும் இலை — எமக்கு ஒ
ருமலமும் இல்லை,

எல்லாரும் தொழும் ஈசன்—சர்வான்மாக்களும் வழிபட்டு வணங்கும் கடவுளும் நாம்,

எனக்கு அவத்தை எவையும் இலை—எமக்கொரு அவத்தையும் இல்லை,

நில்லாத உலகத்தை மிக நீங்கி நிற்பேன் நான் — அநித்தியமா யிருக்கிற பிரவஞ்சத்தை மிகவும் நீங்கிப் பிரவஞ்சாதீதமாய் நிற்போம் நாம் எ-று. (சகூ)

கலிநிலைத்துறை.

ஒன்றுடனுந் தோய்வில்லா னொத்தார் மிக்காரில்லா னுலக மில்லான், நின்றநினைவுக்கெட்டா நித்தன்கா ணப்படா னெஞ்சினிற்பான், பொன்றுபிறப் பிலிமுதலா மறிவினனிட் களன்பழையொன் பொருள்களில்லோன், என்று நினைந் தடிக்கடியும் பிரமமென நோக்குதலே யியல்பதாகும்.

(இ-ள்.) ஒன்றுடனும் தோய்வு இல்லான்—சர்வோபாதிகளுடனுங் கூடாதவர்,

ஒத்தார் மிக்கார் இல்லான்—ஒப்பு முயர்வு இல்லாதவர்,

உலகம் இல்லான்—பிரவஞ்சாதீதர்,

நின்ற நினைவுக்கு எட்டான் — வாக்கு மனாதீதர்,

நித்தன்—அழிவற்றவர்,

காணப்படான்—ஞானக்கண்ணினால் அன்றி இந்திரியங்களினாலே காணப்படார்,

நெஞ்சில் நிற்பான்—முத்தான் மாக்களின் நெஞ்சத்தே நிற்பார்,

பொன்று பிறப்பு இலி—பிறப்பு இறப்பு இல்லார்,

முதல் ஆம் அறிவினன்—இங்ஙனம் சொல்லப்பட்ட முறைமைகளை யுடைய ஞான சொரூபர்,

நிட்களன்—கலாரகிதர்,

பழையோன்—அநாதியே உள்ளவர்,

பொருள்கள் இல்லோன்—நிராலம்பசொரூபர்,

என்றுநினைந்து அடிக்கடியும் பிரமம் என நோக்குதலே இயல்பது ஆகும்—இவ்வாறே நினைந் திடைவிடாமல் அடிக்கடி பிரமசொரூபமே நாமென்று காண்பதே இயல்பாம் எ—று. (சஎ)

கொச்சகக்+லிப்பா.

இப்படியே பாவித்துச் சலியாதான் யாவனவன், அப்பிரம மாதலா லமுதமா மழகியாய், செப்பரிய வீடுபெறத் தெரிந்து

ரைத்த ஞானமீ, திப்பொழுதா சாரந்தா
னியம்புகின்றே னிதுகேட்பாய்.

(இ-ள்.) அமுதம் ஆம் அழகியாய்—அழ
கினையுடைய ஆநந்த சொரூபியே,

இப்படியே பாவித்துச் சலியாதான் யா
வன் அவன் அப்பிரமம் ஆதலால்—முன்
சொன்னபடியே அத்துவித பாவனை பண்
ணிக்கொண்டு பின்பு பாவனாதீதமா யிருப்
பவன் யாவன், அவன் பிரமசொரூபம் ஆ
கையினாலே,

செப்ப அரிய வீடு பெறத் தெரிந்து உரை
த்த ஞானம் ஈது — சொல்லுதற் கரிதாகிய
பரமசிவ சாயுச்சியத்தை அடைவதற்கு வி
சாரித்துச் சொல்லப்பட்ட ஞானம் இது
வாம்,

இப்பொழுது ஆசாரம் இயம்புகின்றேன்
இது கேட்பாய்—உத்தேசக்கிரமத்தில் இங்
ஙனஞ் சொல்லிய ஞானத்துக்கு உசிதமாயி
ருக்கிற ஆசாரத்தைச் சொல்லுகிறோம் கே
ட்பாயாக எ-று. தான்-அசை. (சஅ)

சச்சிதாநந்த சிவமேயாயிருக்குஞ் சீவன்
முத்தனுக்கு விடப்படுவதா யிருக்கிற கிரி
யைகளை அருளிச்செய்கின்றார்:—

கலிவிருத்தம்.

இந்த முத்தி யடைவதற் கேந்திழாய்
அந்த ஞான மலாதொரு ஞானமும்
சிந்தை செய்சிவ பூசையு மோமமும்
அந்த மில்சா தனமங்கி வேண்டாவால்.

(இ-ள்.) ஏந்து இழாய் இந்த முத்தி அடைவதற்கு—சிறந்த ஆபரணத்தை உடையாளே, இங்ஙனஞ் சொல்லப்பட்ட முத்தியை அடைவதற்கு,

அந்த ஞானம் அலாது ஒரு ஞானமும்—முன்சொன்ன ஞானமே அல்லாமல் வேறே ஒரு பாசபசு ஞானங்களும்,

சிந்தைசெய் சிவ பூசையும் ஓமமும்—சிந்திப்பதாகிய சிவார்ச்சனையும் நித்தியாக்கினி காரியமும்,

அந்தம் இல் சாதனம் அங்கி வேண்டா—மோட்சத்தைச் சந்திப்பதாகிய பல சாதனங்களும், சோதிட்டோமம் ஆதியாகியயாகங்களும், வேண்டுவதில்லை எ-று. ஆல்-அசை.

இப்படிப்பட்ட சீவன்முத்தனுக்கு நித்தியநியமங்கள் முதலான அநுட்டானங்களும் வேண்டுவதில்லையென்று அருளிச்செய்கின்றார்:—

நியமங் கேத்திரம் பீடநீர் யாத்திரை, செ
யமுன் சொன்ன விச் சேவை விருந் தோம்
பல், பயனின் றாம்பிதிர் பூசையுஞ் சீலமு
ம், இவையின் றாமுத்தி யெய்து மிவர்கட்
கே.

(இ-ள்.) நியமம்—சௌசவிதி முதலான
நித்திய நியமங்களும்,

கேத்திரம் — புண்ணிய க்ஷேத்திர வாச
மும்,

பீடம்—காஞ்சி முதலான ஆதிபீட சே
வைகளும்,

நீர் யாத்திரை—கங்கை முதலான தீர்த்த
யாத்திரைகளும்,

செயமுன் சொன்ன இச்சேவை — செய்
வதாகச் சைவாகமங்கள் முன்பு சொல்லிய
சேவைகளும்,

விருந்து ஓம்பல்—விருந்தினரை உபசரி
த்தலும்,

பயன் இன்று ஆம் பிதிர் பூசையும்—தம
க்குப் பயனற்ற பிதிர்களைப் பூசித்தலும்,

சீலமும்—நல்லொழுக்கமும்,

முத்தி எய்தும் இவர்கட்கு இவை இன்
று ஆம்—சீவன் முத்தர்களுக்கு இங்ஙனஞ்

சொல்லப்பட்ட இவைகளெல்லாமும் வே
ண்டுவதில்லையாம் எ-று. ஏ-ஈற்றசை. (ருO)

அட்டமி முதலான விரதங்களும், மற்ற ஒழுக்கமும், சீவன்முத்தனுக்கு வேண்டுவ தில்லையென்று அருளிச்செய்கின்றார்:—

தன்மமு மதன்மமுந் தன்னைச் சார்கிலா
என்னிலட் டமிமுதல் விரதமென் செய
மன்னிய வுலகினி லொழுக்கமு மற்றுள
கன்மமும் விடுதலே கருமங் காண்கிலே.

(இ-ள்.) தன்னைத்தன்மமும் அதன்மமும் சார்கிலா என்னில் அட்டமிமுதல் விரதம் என்செய—சீவன்முத்தனைப் புண்ணியபாவங்கள் பொருந்தா; ஆகையினாலே, அட்டமி, சதுர்த்தசி, சோமவாரம், கேதார விரதம், தவம், பரலோகம் அடையவேண்டும் என்னும் புத்தி, தானம், பூசைகள், சித்தாந்த சிரவணம், இவை முதலியவிரதங்களும் யாதுபயனைத்தர, [வேண்டுவதில்லை என்றபடி] காண்கில் மன்னிய உலகினில் ஒழுக்கமும் மற்று உள கன்மமும் விடுதலே கருமம்—ஆலோசிக்குமிடத்து அச்சீவன்முத்தன் நிலைபெற்ற உலக ஒழுக்கங்களையும் மற்றுமுள்ளனவாகிய கன்மங்களையும் விடுதலே காரியம் எ-று. (ருக)

சமயாசாரங்களும், சங்கற்ப விகற்பங்களுந்ம், குலாசாரங்களும், சீவன் முத்தனுக்கு வேண்டாவென்று அருளிச்செய்கின்றார்:—

சமையா சார சங்கற்ப விகற்பமும்
அமையா தாங்குல வாசார மானதும்
இமையா தாரும் விடாதவில் வாழ்க்கையும்
அமையார் தோளாய் விடுதலா சாரமே.

(இ-ள்.) அமையார் தோளாய்—மூங்கில் போலும் தோள்களையுடையாய்,

சமயா சாரம்—சமய தீட்சைக்குப்பிறகு அநுட்டிக்கும் சமயாசாரங்களும்,

சங்கற்ப விகற்பமும்—இச்சாசொரூபமாயிருக்கிற மனசங்கற்பங்களும், பூர்வாவஸ்தா சாதித்தன்மாதி ஞானங்களும்,

அமையாது ஆம் குல ஆசாரம் ஆனதும்—அமைவுபெறாத குலாசாரங்களும்,

இமையா தாரும் விடாத இல் வாழ்க்கையும்—இமையா நாட்டத்தையுடைய தேவர்களும் விடாத இல்வாழ்க்கையும்,

விடுதல் ஆசாரம்—இங்ஙனஞ் சொல்லப்பட்ட இவைகள் எல்லாம் விடுதல் ஞானாசாரம் எ-று. ஏ-அசை. (ருஉ)

அளவற்ற இன்பமாகிய சாயுச்சியத்தை விரும்பினவன் சித்திகளையும், சர்வபதார்த்தங்களையும், விடக்கடவனென்று அருளிச்செய்கின்றார்:—

சொச்சகக்கலிப்பா.

பல்வகைய சித்திகளும் பாதாளத்திற் செலவும், சொல்லரிய பொருண் முழுதுஞ் சோராமற் பெற்றிடினும், எல்லையிலா வின்பமா முத்திபெற வெண்ணு மவன், அல்லறருஞ் சிற்றின்ப மடையவவா வொழிவான்.

(இ-ள்.) பல்வகைய சித்திகளும்—பலவகைப்பட்ட சித்திகளும்,

பாதாளத்தில் செலவும் — சத்த பாதாளங்களிற் செல்லுகையும்,

சொல்ல அரிய பொருள்முழுதும் சோராமல் பெற்றிடினும்—சொல்லுதற் கரிய இருவகை மாயையின்கட்டோன்றிய இருநூற்றிருபத்து நாலு புவனங்களிலே உள்ள சர்வபதார்த்தங்களையும் குறைவறப் பெற்றானே ஆயினும்,

எல்லை இலா இன்பம் ஆம் முத்திபெற எண்ணுமவன் — முதல் நடு இறுதி இல்லாததாய், பரமாநந்த சொரூபமா யிருக்கிற சி

வாநநிய சாட்சாத்காரத்தைப் பெறவிரும்பிய சீவன் முத்தன்,

அல்லல் தரும் சிற் றின்பம் அடைய அவா ஒழிவான்—துன்பத்தைத் தரும் சிற்றின்ப முழுவதையும் பற்றுதல் செய்யாமல் விடுவன் எ-று.

பல்வகைய சித்திகளும் என்றது. அட்டாங்கயோக அப்பியாசத்தினாலே வரும் பலவகைப்பட்ட சித்திகளை, அவையாவையெனில், குழந்தைப் பருவ முடையான் மேருவைப்போல வளர்த்தல், யவ்வன பருவமுடையான் கிழவனாதல், கிழவவன் யவ்வனனாதல், நானாவித மாகிய சாதி ரூபங்களா யிருத்தல், நான்கு பூதங்களால் தேகமெடுத்தல், நித்தியமாயிருக்கிற பரிமளத்தை நீங்காமற்பண்ணுதல், சலத்தின் மேலிருத்தல், மண்போலிருத்தல், தண்ணீருக்குள்ளே எத்தனை காலமாகிலு முழுகிக்கிடத்தல், சமுத்திரம் ஆறு குளம்ஆகிய இவற்றைச் சலமில்லாமற் காண்பித்தல், உள்ளங்கையிற் சமுத்திரத்தை வாங்கல், கரும்புமுதலிய ரசவஸ்துக்களை ரசமில்லாமற்பண்ணுதல், பேய்க்கரும்புமுதலிய ரசமில்லாதவஸ்துக்களைக் கரும்புபோல் ரசமுள்ளதாகப் பண்ணு

தல், மூன்று பூதங்களினுல் தேக முண்டாக்கல், கற்களில்பாய்ந்தாலும் ஊறுபடாமலிருத்தல், அக்கினியைச் சுயமே உண்டாக்கல், அக்கினியிலே நடத்தல், அக்கினியி ஞலே வாதை யில்லாமற் பண்ணுதல், தண்ணீரிலே அக்கினியை எரியப் பண்ணுதல், அக்கினியைக் கையிலேந்தல், அந்நியர் மனத்து நினைத்தது சொல்லல், பேசிக்கொண்டிருக்கையை அந்நியர்க்குக் கேளாமற் பண்ணுதல், அறுவகை ரசங்களையு முண்டறியாமற் பார்த்தே ரசமறிதல், கல்லைக்கறியமுதாகச் சமைத்தல், இரண்டு பூதங்களில் தேகமெடுத்தல், மஞே வேகமாகச் செல்லுதல், ஆகாசரூபமா யிருத்தல், அதுநீங்கி வாயுரூபமாதல், அதுநீங்கித் தேயுரூபமாதல், அதுநீங்கிச் சலரூபமாதல், அதுநீங்கிப் பிருதிவிரூபமாதல், இங்ஙன மாறிமாறிப் பூதபேதங்களாதல், பர்வத முதலான பாரங்களையெடுத்தல், அணுப்பரிமாணமத்திய பரிமாணமகற்பரிமாணம் பரமமகற்பரிமாணமாதல், வாயுவைக் கையாற் பற்றுதல், ஒரு விரலாலே பூமியைக்குத்தி நடுங்கப் பண்ணுதல், ஒரு பூதமாயிருந்து பயமுறுத்தல், நிழலைக்கீறித் துண்டித்தல், கண்ணுக்குத் தோன்ருமற் சஞ்சரித்தல், ஆகாயத்தில் நடத்தல், ஏககா

லத்தி லளவிறந்த வனிதையருடனே சை யோகம் பண்ணுதல், மலைகளைக்கடத்தல், மலைகளை நடுங்கப்பண்ணுதல், ஆகாசத்தை யளாவல், மலைகளை வளரச்செய்தல், சரீரமில்லாமலிருத்தல், எவ்வெவ் வுருவங்கள் எவ்வெவ்விடயங்கள் வேண்டுமோ வேண்டியபடியே உண்டாக்கல், சகலத்தையும் தோன்றாமல் மறைத்தல், சகல ரகசியங்களையும் அறிதல், இராசத தாமத சாத்விகங்களில் எந்தக் குணங்களை யாவர்க்குண்டாக்க வேண்டுமோ அவ்வாறே உண்டாக்கல், இந்திரிய நிக்கிரகம் பண்ணுதல், சமுசாரியாய் அநேகம் பிள்ளைகளோடும் ஸ்திரீகளோடும் இருத்தல், வெட்டு அடி கட்டு இவை தனக்கில்லாமற் பண்ணுதல், மரித்தவனை யெழுந்து வார்த்தை சொல்லப் பண்ணல், பின்பும் தேகத்தோடே கூடிச் சமுசாரியாயிருக்கச்செய்தல், கண்டகதப் பிராணனாயிருக்கிறவனைப் பிழைப்பித்தல், தேகத்தை உண்டாக்கல், இரட்சித்தல், சங்கரித்தல், இஷ்டமா யிருக்கிற எந்த அதிகாரம் பண்ணவேண்டுமோ அந்த அதிகாரத்தைப் பண்ணுதல், எந்தலோகத்தை உண்டாக்கவேண்டுமோ அந்த லோகத்தை உண்டாக்கல், ஓரிடத்தும் இல்லாதலோகத்தை உண்டாக்

கல், எல்லா நன்மைகளையும் உண்டாக்கல், எல்லாத் தீமைகளையும் உண்டாக்கல் முதலியனவாம், இங்ஙனஞ் சொல்லிய சித்திகளெல்லாம் பிருதிவி தத்துவத்திலிருக்கிற புவனங்களி லுள்ளார்க்குவரும் அட்டமாசித்தியின்பேதமாம், பிருதிவி அப்புத் தேயு வாயு ஆகாசம் மனம் புத்தி ஆங்காரமென்று சொல்லப்பட்ட எட்டுத் தத்துவங்களிலு மொவ்வொன்றுக் கெட்டுச் சித்தியாக எட்டுத் தத்துவங்களிலும் அறுபத்து நான்கு சித்திகளுண்டு, இவ் வறுபத்துநான்கு சித்திகளையும் இவை முதலிய அளவிறந்த சித்திகளையும் சீவன்முத்தர் வேண்டார். (ருங)

விபுவாய்ச் சித்துருபமா யிருக்கிற சிவசாயுச்சிய மோட்சம் அட்டமாசித்தி முதலிய சகல சித்திகளினாலும் பதப் பேறுகளினாலும் உண்டாகாதென்று அருளிச் செய்கின்றார்:—

அட்டமா சித்திமுத லனைத்துள்ள பேறு
களும், கட்டமாங் கதிகடரும் பரகதிகா ண
க்கொடா, மட்டிலா மாலையாய் வியாபகமா
யறிவாகிக், கிட்டலா காமுத்தி மற்றிவற்று
ற் கிடையாதே.

(இ-ள்.) மட்டு உலா மாலையாய் — தேன் பொருந்திய மலர்மாலையை உடையாய்,

அட்டமா சித்தி முதல் அனைத்து உள்ள பேறுகளும் கட்டம் ஆம் கதிகள் தரும் பரக திகாணக் கொடா—அட்டமாசித்தி முதலா ன சித்திகளும், சொர்க்காதி பதப்பேறுகளு ம், சனனமரணத்துக்கு ஏதுவாகியதுக்கங்க ளைக் கொடுப்பதாகும், இவை பரமசாயுச்சி ய மோட்சத்தைக் கொடுப்பனவல்ல,

வியாபகம் ஆய் அறிவு ஆகிக் கிட்டல் ஆகா முத்தி இவற்றுல் கிடையாது—விபு வாய், சித்துருபமாய், கிடைத்தற் கரிதாயி ருக்கிற பரமமோட்சம், இங்ஙனஞ் சொல் லப்பட்ட சித்துகளினுலேயும் பதப்பேறுக ளினுலேயும் கிடையாது எ-று. ஏ-மற்று- அசை.

(ருச)

யாதொரு சமயங்களில் பிரத்தியட்சமாக ச் சித்திகளுண்டா யிருக்கினும், புண்ணிய ஸ்தலங்களில் தெய்வீகங்கள் உண்டாயிருக் கினும், அவை பொருளல்லவென்று அறிந் து ஞானி அவற்றில் ஆசை நீங்கவேண்டுமெ ன்று அருளிச்செய்கின்றுர்:—

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

யாதொரு விடயந் தன்னு லவத்தையை
யெய்தி னுலும், காதலால் யோகந் தன்னைக்
கருதுவான் பிறிதோர் தேசம், தீதிலாப் பீ
டந் தன்னிற் சிறப்புடைத் தெனினுஞ் சித்
தத், தாதவை யடையு மாசை யடையாம
லாக்கிக் கொள்வான்.

(இ-ள்.) யாது ஒரு விடயம் தன்னால் அ
வத்தையை எய்தினும்—ஞானக் கண்ணி
னை உடையோர் எந்தெந்த விடயங்களினு
ல் பிரத்தியட்சப் பலன்களைக் கொடுப்பதா
கிய சர்வசித்தி அவத்தைகளை அடைந்திரு
ந்தாலும்,

காதலால் யோகந் தன்னைக் கருதுவான்
—விருப்பத்தினுல் சத்தியஞான அநந்தாந
ந்த சிவயோக சிந்தனையை உடைய சிவ
ஞானி,

பிறிது ஓர் தேசம் தீது இலாப் பீடந் தன்
னில் சிறப்பு உடைத்து எனினும் சித்தத்தா
தவை அடையும் ஆசை அடையாமல் ஆக்
கிக் கொள்வான்—வேருெரு புண்ணிய ஸ்த
லங்களிலும், குற்றமற்ற அந்தந்தத் தலங்க
ளிலிருக்கும் திவ்விய இலிங்கங்களிலும் சிற
ப்புடையதெனின், உள்ளத்தின்கண் ஆசை

உண்டாம்; உண்டாயின், விடலாமோ விடலாகாதோ என்று சந்தேகப்படாமல், அவ்வாசையில் நின்றும் சித்தத்தைத் திருப்பிக்கொள்வர் எ-று. (௫௫)

சீவன் முத்தனானவன் சராசரமாயுள்ள சகல சீவன்களிடத்தும் அகிதஞ்செய்யாமல் அன்புவைப்பதே சிறப்பென்று அருளிச்செய்கின்றார்:—

அளியமர் குழலாய் வீட்டை யடையவே கருது நல்லோர், நெளிவன பறப்ப வூர்வ நிற்பன முதல வாகிக், களியுடை யுயிர்க்குத் துன்பங் காண்கிலா வாழ்க்கை யானால், அளியினா லருளை யென்று மாக்குவ தழகி தாமால்.

(இ-ள்.) அளி அமர் குழலாய்—புட்பங்களினாலே வண்டுகள் விரும்பி மொய்க்கின்ற அளகத்தை உடையாளே,

வீட்டை அடையவே கருதும் நல்லோர்—மோட்சத்தையே அடைய விரும்பிய நல்லோர்கள்,

நெளிவன பறப்ப ஊர்வ நிற்பன முதல ஆகி—வேர்வையினால் உண்டாகும் கிருமியும் ஒருகணத்திற்றோன்றி ஒருகணத்தில்

மரிக்கும் கீடமும், விட்டிற் பறவையும், ஊர்வனவும், தாவரங்களும் முதலியனவாய்,

களி உடை உயிர்க்குத் துன்பம் காண்கிலா வாழ்க்கை ஆனல் — களிப்பையுடைய உயிர்களுக்குத் துன்பஞ்செய்யாமல் வாழ்தலே முறைமையாயின்,

என்றும் அளியினல் அருளை ஆக்குவது அழகிது ஆம்—நாள்தோறும் அன்பினலே உயிர்களிடத்து கிருபை வைப்பதே சிறப்பாகும் எ—று. ஆல்—அசை. (௫௬)

சீவன் முத்தன் சீவ இம்சையின்றிச் சிவபெருமானைப் பூசிக்கவேண்டின், உதிர்ந்த மலர்களை எடுத் தருச்சிக்க வேண்டுமென்று அருளிச்செய்கின்றார்:—

கொச்சகக்கலிப்பா.

நடுங்காம லெவ்வுயிரு நறுக்காமற் றுரும் பனைத்தும், பிடுங்காது முதலெவையும் பிரசமலர் கொய்யாது, விடுங்காலா லூழ்த்துதிர்ந்த விரைமலர்க ளவையேந்தி, அடுங்காலன் றனையட்ட வம்புயங்க ளரிச்சிப்பான்.

(இ—ள்.) எவ்வுயிரும் நடுங்காமல் துரும்பு அனைத்தும் நறுக்காமல்—சர்வான்மாக்களும் அஞ்சாதபடி திரணசேதம் பத்திரசேதம் பண்ணுமல்,

முதல் எவையும் பிடுங்காது—முதலோடு யாதொரு செடி கொடி பூண்டு முதலிய எவற்றையும் பிடுங்காமல்,

பிரச மலர் கொய்யாது — தேன்பொருந்திய மலர்களைக் கிள்ளாமல்,

விடும் காலால் ஊழ்த்து உதிர்ந்த விரை மலர்கள் அவை ஏந்தி—வீசுங்காற்றால் மலர்ந்து உதிர்ந்து கிடக்கிற மணமுள்ள மலர்களை எடுத்து,

அடும் காலன் றனை அட்ட அம்புயங்கள் அருச்சிப்பான்—சர்வ பிராணிகளையுங் கொல்லுகின்ற நமனை நிக்கிரகம் பண்ணிய சிவந்த தாமரை மலர்போன்ற திருவடிகளை யருச்சிப்பார் எ—று. (௬எ)

சீவன் முத்தனானவன் மாரண முதலான அட்ட கன்மங்களையும் விடக்கடவனென்று அருளிச்செய்கின்றார்:—

கலிவிருத்தம்.

பிணக்கந் தம்பனை பேர்த்த லுயிர்க் கொலை
இணக்கம் பூத பசாசுவெப் பேற்றுதல்
புணர்க்கும் வசியம் போனார்வ ரன்மையல்
வணக்கந் தாவரங் குத்திர மாற்றுவான்

(இ-ள்.) பிணக்கம் — வித்துவேஷணமாகிய பகை செய்வித்தலும்,

தம்பனை—பூதபிரோத பசாசுகளைத் தம்பனஞ்செய்து கட்டுதலும்,

பேர்த்தல் உயிர்க்கொலை இணக்கம்—பூதபிரோத பசாசுகளை ஓட்டுவதாகிய உச்சாடணமும், கொலைத் தொழிலாகிய மாரணமும், செய்ய இணங்குதலும்,

பூதம் பசாசு வெப்பு ஏற்றுதல் — முன்சொன்ன பூதபிரோத பசாசுகளையும், சுரமுதலிய வியாதிகளையும், ஆவேசம்பண்ணுவித்தலும்,

புணர்க்கும்வசியம் போனார்வரல் — பொருத்தும் வசீகரத்தினாலே வேண்டாதவர்களை வசமாக்கி அழைத்தலும்,

மையல்—மோகனமும்,

வணக்கம் தாவரம் குத்திரம் மாற்றுவான்—வேர்முதலான பூண்டுகளினால் குளிசம்பண்ணுதலும், இப்படிப்பட்ட அட்டகன்மங்களாகிய குத்திர கன்மங்களை ஞானியானவன் பண்ணாதொழிவன் எ-று. (ருஅ)

சீவன் முத்தன் சர்வ பதார்த்தங்களினும் ஆசையின்றிச் சமதிருஷ்டி பண்ணுவ னென்று அருளிச்செய்கின்றார்:—

கொச்சகக்கலிப்பா.

ஆசையினை யறவிட்டெப் பொருட்கு மொத்துச் சுகதுக்கம், பேசியநட் டார்ப கைஞர் பீடுடையோர் பீடில்லோர், மாசி லொளி வளருமணி காஞ்சனங்கல் லோட் டினும், நேசமறப் பார்த்துணர்ந்து சம நிலத்தே நிலைநிற்பான்.

(இ-ள்.) ஆசையினை அறவிட்டு எப்பொ ருட்கும் ஒத்து — சீவன்முத்தன் பிரவஞ்ச த்தின்கணுள்ள ஆசையைப் பற்றற விட்டு ச் சர்வ பதார்த்தங்களிலுஞ் சம திருட்டிப ண்ணி,

சுகதுக்கம்—சுகதுக்கம் வந்த விடத்தும்,

பேசிய நட்டார் பகைஞர் — சொல்லப்ப ட்ட நட்பின ரிடத்தும் பகைவரிடத்தும்,

பீடு உடையோர் பீடு இல்லோர்—பெரு மை உடையவர்களிடத்தும் பெருமை இல் லாதவர்களிடத்தும்,

மாசு இல் ஒளிவளரும் மணிகாஞ்சனம் கல் ஓட்டினும்—குற்றமற்ற ஒளி வளரா

நின்ற நவரத்தினம் பொன் கல் ஓடு ஆகிய இவற்றினிடத்தும்,

நேசம் அறப் பார்த்து உணர்ந்து சம நிலத்தே நிலை நிற்பான்—விருப்பம் இல்லாமல் பார்த்தறிந்து சதாகாலமும் கேவலசகலந் தாக்காமல் சுத்தாவத்தையில் நிற்பன் எ-று. (ருக)

சிவஞானி சர்வவிஷயங்களையு நீங்கி, பிரவஞ்சத்திலே அதிசயமும் பயமும் இன்றி, தேவர்களாலும் அறிய ஒண்ணுத பரமசுகத்தைப் பொருந்தி இருப்பனென்று அருளிச் செய்கின்றுர்:—

கலிவிருத்தம்.

யோகி யாகி யொழுகு மியல்பினேன்
போக மாற்றிப் பொருண்மேற் புலன்களை
வேகமாய பயமும் வியப்பும் போய்
மாகர் காணுச் சுகத்தை மருவுவான்.

(இ-ள்.) யோகி ஆகி ஒழுகும் இயல்பினேன்—சிவயோகியாய்ச் சஞ்சரிக்கும் இயல்பினை உடைய சிவஞானியானவன்,

புலன்களைப் பொருண்மேல் (மாற்றி)—இந்திரியங்களை விடயங்களிற் செல்லாமல் தடுத்து,

போகம் மாற்றி—மாயா போகத்தின்கண் உள்ள இச்சையை நீக்கி,

வேகம் ஆய பயமும் வியப்பும் போய்—பிரவஞ்சத்தின்கண் அதிவேகமா யிருக்கிற பயமும் கொண்டாட்டமும் நீங்கி,

மாகர் காணுச் சுகத்தை மருவுவான்—தேவர்களாலும் காணப்படாத நின்மல நித்த சுத்த நிரதிசயமாகிய பரமசுகத்தை அடைவன் எ—று. (௬0)

சர்வ பிராணிகளையுந் தன்னைப்போல் கருதி, இகழ்வார் புகழ்வா ரிடத்தும் சமபுத்தி பண்ணுகின்ற சிவஞானியே கீழ்ச்சொன்ன ஞானுசாரம் எல்லாம் உடையவனென்று அருளிச்செய்கின்றார்:—

கொச்சகக்கலிப்பா.

தனக்கினிய ளும்வகையே சராசரங்க ளனைத்தினையும், நினைத்திகழ்வார் புகழ்வார் பா லொத்திருக்கு நீர்மையினை, மனத்துடைய னவன் யாமுரைத்த வாசாரம், அனைத்துடைய னகவறி வெறியமரு மைம்பாலாய்.

(இ—ள்.) வெறி அமரும் ஐம்பாலாய்—வாசனைதங்கிய கூந்தலை யுடையாளே,

தனக்கு இனியன் ஆம் வகையே—தனக்குத் தானினியனா யிருக்குந் தன்மையே போல்,

சரா சரங்கள் அனைத்தினையும் நினைத்து இகழ்வார் புகழ்வார்பால் ஒத்திருக்கும் நீர்மையினை மனத்து உடையன் ஆன அவன்—சராசரமாயுள்ள சர்வ பிராணிக ளிடத்துங் கிருபை உடையவனாய், தன்னை இகழ்பவர்களிடத்தும் புகழ்பவர்க ளிடத்தும் சமபுத்தி உடையவனா யிருப்பவன்,

யாம் உரைத்த ஆசாரம் அனைத்து உடையன் ஆக அறி— நாம் சொல்லிய ஞானசாரங்கள் எல்லாவற்றையும் உடையவன் அவனே என்று அறிவாயாக எ—று. (சுக)

ஞானியானவன் தர்க்கவாதமே முதலாய பயனற்ற வியாபாரங்களை நீங்கி இருப்பனென்று அருளிச்செய்கின்றார்:—

சலிநிலைத் துறை.

வாதுரை பயனில் சொல்லும் பிறருடன் மகிழ்ந்திருத்தல், பேதுறு பிணக்க நீங்கிப் பெரியவ னருளினாலே, ஓதுநா லோத லோவி யுலகினி னன்றுதீதென், றுதியி லுரைத்த தெல்லா மறவிட்டே யமர்ந்திருப்பான்.

(இ-ள்) வாது உரை—பிறரை வெல்லவேண்டும் என்று அதற்கு ஏற்றவார்த்தை சொல்லுதலாகிய வாதமும், சுவயமதஸ்தாபனமும் பரமத தூஷணமும் ஆகிய செற்பமும், தூஷணமுஞ் சுவயமதஸ்தாபனமும் பண்ணுது, பரமததூஷணம் பண்ணும் விதண்டையும் ஆகிய தர்க்கவசனங்களையும்,

பயன் இல் சொல்லும்—பிரயோசன மற்ற வசனங்களையும்,

பிறருடன் மகிழ்ந்திருத்தல் — உலகத்தாரோடு கூடிப் பிரியமா யிருத்தலையும்,

பேதுறு பிணக்கம் — உலக வியாபாரமாகிய பிணக்குகளையும்,

நீங்கி—விட்டு,

ஓது நூல் ஓதல் ஒவி—நிரீசுரசாங்கியம் ஈசுர சாங்கியம் வைதீகம் அவைதீகம் ஏகான்மவாதம் அநேகான்மவாதம் வியாபகம் அவ்வியாபகம் என்று இங்ஙனஞ் சொல்லப்பட்ட சாத்திரகோஷ்டிகளையும் விட்டு,

உலகினில் நன்று தீது என்று ஆதியில் உரைத்தது எல்லாம் அறவிட்டு—பிரவஞ்சத்திற் சுபாஷிதம் குபாஷிதமாக, முன்சொல்

லப்பட்ட வார்த்தைகள் எல்லாம் பற்றறவி
ட்டு,

அருளினாலே பெரியவன் அமர்ந்து இரு
ப்பான்—கிருபையினாலே பெரிய சிவஞானி
யானவன் நிருவிகற்ப சமாதியில் அமைவா
க இருப்பான் எ-று. ஏ-அசை. (௩௨)

பாகியத்தில் விடத்தக்க குணங்களைக்கூறி
அந்தரங்கத்தில் விடத்தக்க குணங்களை அரு
ளிச்செய்கின்றார்:—

கலிவிருத்தம்.

ஆசை கோபம் பயஞ்சோக ராகமாம்
மாசு மாட்சியுள் ளோராக்க மாற்றமை
பேசு தீமை பிறர்க்குத் தமக்கிலாத்
தேசி மூக்குடன் றீர்வார் சிறந்தவர்

(இ-ள்.) ஆசை—சர்வ பதார்த்தங்களில்
மனப்பற்றும்,

கோபம்—குரோதமும்,

பயம்—அச்சமும்,

சோகம்—துக்கமும்,

இராகம் ஆம் மாசு—பெண்ணாசையாகிய
குற்றமும்,

மாட்சி உள்ளோர் ஆக்கம் ஆற்றாமை—பெருமை உடையார் செல்வங்கண்டு பொறாமையும்,

பிறர்க்குப் பேசுதீமை—பிறர் மேற் கோட்சொல்லுதலும்,

தமக்கு இலாததேசு—தமக்கில்லாத கீர்த்தியை விரும்புதலும்.

இழுக்குடன் தீர்வார் சிறந்தவர் — இங்ஙனஞ் சொல்லப்பட்ட குற்றங்களெல்லாவற்றையும் விட்டு விடுவர்கள் சிறப்பினையுடைய சிவஞானிகள், எ—று. (௩௫)

சிவானுபூதி விளங்காத ஞான சாதகருக்கு மாயாபோகத்தில் இச்சை உண்டாம் என்று அருளிச்செய்கின்றார்:—

கொச்சகக்கலிப்பா.

பொருண்முழுதும் விட்டுடம்பு பொருந்துஞ்சார் வறப் போவார், இருளறுஞான னம் விளங்கி யெப்பொருளு மறிவாராய், இருவினைவீ டறிவாலே யிடர்பிறவென் றறிந்தாலும், மருளதுறும் போகத்து மனம் வைப்பர் சாதகர்தாம்.

(இ—ள்.) பொருள்முழுதும் விட்டு—புண்ணியபாவம், சுகதுக்கம், விருப்பு வெறுப்பு,

பசிதாகம், சீதோஷ்ணம், புகழ்ச்சி இகழ்ச்சி, லாப லோபம், வைராக்கியம் அவைராக்கியம், ஐசுவரியம் அனைசுவரியம், ஞானம் அஞ்ஞான மென்று சொல்லப்பட்ட மாயா தோற்றங்களாகிய சர்வோபாதியும் விட்டு நீங்கி,

சார்வுஅற — சனங்களோடு கூட்டரவில்லாமல் ஏகாந்தியாய்,

இருள்அறு ஞானம் விளங்கி — நின்மலசொச் சொரூபஞானம் பிரகாசித்து,

எப்பொருளும் அறிவார்ஆய் — சர்வஞ்ஞராய்,

உடம்பு பொருந்தும் — எடுத்த சரீரத்திலேதானே வாராநிற்கும்,

போவார்—சாயுச்சிய மடையப் போவார் (ஆயினும்.)

இருவினைவீடு அறிவாலே இடர்பிற என்று அறிந்தாலும் மருளது உறும் போகத்து மனம் வைப்பர் சாதகர்—புண்ணிய பாவங்களும், அதனால் வருஞ் சுகதுக்கங்களும், மோட்ச இயல்பும், போகத்தில் இச்சையும் ஆகிய இவை எல்லாம் பிறவித்துன்பத்துக் கேதுவென் றறிந்தாலும், மயக்கத்தை உ

டைய மாயாயோகத்தில் மனம் வையாநி
ற்பர் சிவானுபூதி விளங்காமல் ஞானோபா
யத்தைச் சாதிக்கிற சாதகர், எ-று. தாம்—
அசை. (௬௪)

மோட்சமே முக்கிய பலமென் றெண்ணி
அதிலே ஏகாக்கிர சித்தராய்ப் பிரவிர்த்தி
பண்ணுகிற மோட்ச சாதகருக்கு அணிமா
முதலாயுள்ள சித்திகளில் ஆசை உசிதமன்
று, மோட்சமே முக்கியமென்று அருளிச்
செய்கின்றார்:—

கலிவிருத்தம்.

விட்டு மேலாம் பதத்தினை மேவுவோர்க்
கட்டமா சித்தி வந்துறும் வாராதேல்
கட்ட மான கதியைக் கடந்தவர்
எட்டிடா முத்தி தன்னையே யெய்வரால்

(இ-ள்.) விட்டுமேலாம் பதத்தினை மேவு
வோர்க்கு—சர்வோ பாதிகளையும் விட்டு நீ
ங்கி மேலாகிய சிவ சாயுச்சியத்தை அடை
யும் சிவஞானிகளுக்கு,

அட்டமா சித்தி வந்து உறும்—இடையி
ல், அணிமா, மகிமா, லகிமா, கரிமா, பிரா
ர்த்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவ
மென்று சொல்லப்பட்ட அட்டமா சித்தி
முதலான சித்திகள்வரும்,

வாராதேல்—வாராதொழியும் ஆயினும்,

கட்டம் ஆனகதியைக் கடந்தவர்—சனன மரண துக்க எதுவான துன்பத்தை விளைக்கும் அட்டமாசித்தி முதலிய சகல சித்திகளையும், சகல பதார்த்தங்களையும், பொருளல்லவென்று விட்டுநீங்கிய சிவஞானிகள்,

எட்டிடாமுத்தி தன்னையே எய்வர் — மனோவாக்குக் காயங்களுக் கெட்டாததாய், உன் மனாந்தமாய்ப் பரமாயிருக்கும் சாயுச்சியத்தையே அடைவர் எ - று. ஆல் - அசை. (கூரு)

பஞ்சபூத காரியமா யிருக்கிற சரீரத்தில் சிவனிருப்ப னென்றும், சர்வபிர வஞ்சமும் சிவசொரூப மென்றும், அருளிச் செய்கின்றார்:—

கொச்சகக்கலிப்பா.

ஐவகைய பூதகா ரியமென்னு மவ்வுடம்பில், மெய்வகையாஞ் சிவனிற்குஞ் சிவமுதலா மேதினியி, றிவ்வகைய வுலகங்க ளனைத்தினையு மிறையுருவென், றுய்வகையா வுணர்ந்தானே யுமையுணர்ந்தா னுமைகேணீ.

(இ-ள்.) உமைநீ கேள்—பார்வதியே நீ கேட்பாயாக,

ஐவகைய பூத காரியம் என்னும் அவ்வுட ம்பில் மெய்வகை ஆம் சிவன் நிற்கும்—பஞ்சபூத காரியமாயிருக்கிற இந்தச் சரீரத்திலே உண்மையாகிய சிவபெருமானே இருப்பர் (ஆதலால்),

சிவம் முதல் ஆம் மேதினி ஈறு இவ்வகைய உலகங்கள் அனைத்தினையும் இறை உரு என்று—சிவதத்துவமுதல் பிருதிவிதத்துவ முடிவாயுள்ள முப்பத்தாறு தத்துவங்களிலுமுள்ள இருநூற்றிருபத்துநாலு புவனங்களையுஞ் சிவசொரூபமே என்று,

உய்வகை ஆ உணர்ந்தானே எமை உணர்ந்தான்—பிழைக்கும் பொருட்டாக இவ்வாறே சர்வமும் நம்முடைய சொரூபமாக யாவனொருவன் அறிந்தான், அவனே நம்மையறிந்தவன் எ-று.

இருநூற் றிருபத்துநாலு புவனமும் சிவசொரூபம் என்றது சிவதத்துவமுதல் பிருதிவி தத்துவமுடிவாயுள்ள முப்பத்தாறு தத்துவங்களுக்குள்ளே சற்றும் சேஷியாமல் உள்ளும் புறம்பும் பரமசிவ அதிட்டானமே ஆதலின், இதற்கு (உ-ம்.) சிவதருமோத்தரம். "சிவன்றனக் கவனியந்தஞ் செகமதி தூலதேகம், அவனுடற் றூலமாகு முரு

யிர் வர்க்கஞ்சூக்கம், பவன்றனக் குயிர்க்கு மப்பாற் பராபரை பரமசூக்கம்" என்பதனு ற் கண்டுகொள்க. (௬௬)

இங்ஙனஞ் சொல்லப்பட்ட மோட்சசாதகனாகிய சீவன்முத்தன் உலகத்தாரால் உபசரிக்கப்படுவது—சுப்பிரயோசனத்தைச் சாதிப்பதற்கு அன்றென்று, இரண்டு திருவிருத்தத்தால் அருளிச்செய்கின்றார்:—

இவ்வகைய ஞானிதனக் கிருநிலத்தோர் கந்தபுட்பம், மெய்வகைய பலந்தூபம் புனலாடை விளக்கமுது, செய்வகைய மனவாக்குக் காயத்தாற் பூசைசெய்தால், அவ்வகைய வுடம்புடனே வேண்டுமுத்தி யடைவரால்.

(இ-ள்.) இவ்வகைய ஞானி தனக்கு—இப்படிப்பட்ட சிவாநந்திய சாட்சாத்காரமாயிருக்கிற சிவஞானிக்கு,

இரு நிலத்தோர் — பெரிய பூமியின்கண் உள்ளார்,

புனல் ஆடை விளக்கு கந்த புட்பம் மெய்வகைய பலம் அமுது தூபம் மனம் வாக்குக் காயத்தால் செய்வகைய பூசைசெய்தால்—ஸ்நானம் பண்ணுவித்து, பரிவட்டஞ்

சாத்தி, சந்நிதியில் திருவிளக்கிட்டு, திருமேற் பூச்சு கந்தங்களும் திருமாலைகளும் சாத்தி, உண்மையின் பாற்பட்ட முப்பழங்களுடனே திருவமுது படைத்து, தூபதீபம் பணிமாறி மனோவாக்குக் காயங்களாற் செய்யும் வகையினதாகிய சோடசோபசாரத்தோடு பூசை பண்ணினால்,

அவ்வகைய உடம்புடனே வேண்டு முத்தி அடைவர் — அங்ஙனஞ் செய்தவர் அந்தச் சரீரத்தோடு தானே எந்த முத்தியை விரும்பினார்களோ, அந்த முத்தியை அடைவர்கள் எ-று. ஆல்-அசை. (கஎ)

கலிவிருத்தம்.

சொன்ன ஞானி தனைத்துதி செய்தவர்
முன்னஞ் செய்யற முற்று மடைகுவர்
இன்னல் சொன்னவ ரெய்துவர் வன்பவம்
அன்ன மீபவ ரசைவின்ஞா னஞ்சேர்வார்.

(இ-ள்.) சொன்ன ஞானிதனைத் துதிசெய்தவர் முன்னம் செய் அறம் முற்றும் அடைவர்கள்—இங்ஙனஞ் சொல்லப் பட்ட சிவஞானியை யாவரொருவர் துதிசெய்தனர் அவர் சிவஞான மடைதற் கேற்ற முன்னர்ச்செய்த புண்ணிய பலன் முற்றும் அடைவர்,

இன்னல் சொன்னவர் வன்பவம் எய்துவர்—துன்பமுண்டாக நிந்தனை பண்ணினவர்கள் அதிபாதகத்துக் கேதுவாகிய பிறப்பினை அடைவர்,

அன்னம் ஈபவர் அசைவில் ஞானம் சேர்வார்—திருவமுது செய்விப்பவர்கள் அசைவற்ற சிவஞானத்தைப் பெறுவர்கள் எ-று.

பார்வதியார் ஞான சாரங்களைச் சங்கிரகித்துக்கேட்டருள, சிவபெருமான் நன்முகத் திருவுளம்பற்ற, அதனாற் சந்தோஷமடைந்திருக்கும் உமாதேவியாரை நோக்கி, ஞானசாரத்தைச் சொல்லிய இந்த நூலின் முடிவை அருளிச் செய்கின்றார்:—

கொச்சகக்கலிப்பா.

முன்னான ஞானமுடனாசார முடிவெல்லாம், என்னாலே யிக்கால ஞானத்தை யியம்பினதால், மின்னாரு நுண்ணிடையா யினியுனக்கு மீண்டிதனைச், சொன்னாலென் சொலத்தகுவ தனைத்தினையுஞ் சொன்னேமே.

(இ-ள்.) மின் ஆரும் நுண் இடையாய்—மின்போலும் நுண்ணிய இடையினையுடையாளே,

முன்னை ஞானமுடன் ஆசார முடிவு எல்லாம் என்னாலே இக்கால ஞானத்தை இயம்பினது—முந்திச் சொல்லப்பட்ட ஞானமும், ஞானாசாரத்தினுடைய முடிவும் ஆகிய பரிபாககாலத்திலே உண்டாகும் ஞானம் நம்மாலே சொல்லப்பட்டது, அன்றியும்,

சொலத்தகுவது அனைத்தினையும் சொன்னோம் மீண்டு இனி உனக்கு இதனைச் சொன்னால் என்—சொல்லத்தக்க எல்லாவற்றையுஞ் சொன்னோம். ஆதலால், மீண்டும் இனி உனக்கு இதனை சொல்லப்புகின் சொல்லத்தக்கதுயாது, (ஒன்றும் இல்லை என்றபடி) எ-று. ஆல்-அசை. (௯௯)

தேவிகாலோத்தர வுரைபாடம்

முற்றிற்று.

மெய்கண்டதேவன் திருவடிவாழ்க.